M. A. R. Ramanathan

No. 32

INBAVALLI: MALAR—1

# Vidyaraṇyanagaram.



SATAKOPACHARI & CO.,

MADRAS.

Annas 8.

# வித்யாரண்ய நகரம்.

ஒரு சரித்திர விநோதகதை.



இது

கு. ரா. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், பி. ஏ.,

இயற்றியது.

சென்னை:
சடகோபாசாரி அண்டு கம்பெனியார்
வெளியிட்டது.

1901.

To

Mr. V. G. SURYANARAYANA SASTRIAR, B. A.,

SENIOR TAMIL PANDIT

*Madras Christian College.*

SIR,

The interest which you take in the advancement of Tamil literature has persuaded me to address this letter to you; one, which relates the plan I have adopted in the writing of "The city of Vidyâranya." It tells one, how the great city of Vijayanagar,—a city which exercised an unparalleled influence over the destinies of the people of Southern India, for at least a hundred and fifty years—was built. It tells one, how a small band of men, inspired by supremely noble motives, guided by a venerable sage, and led by a self sacrificing general, established an empire, which played an important part in the history of India.

I do not presume to state that this is authoritative history. It is a romance, founded upon the imperfect history of that kingdom by "**Mr. Sewell**"; and the writer of a romance may take some liberty in presenting things after the shape given to them by his imagination. The characters in the romance are not all of them historical. The main plot of my work is founded on real facts; the defeat of Harihara's forces, his flight and meeting with Vidyâranya at Wârangal, his return to Anegundi, the stirring up of the people to revolt, and the final victory of the Hindu forces are all facts of historical truth. The cruelties of Toglakh, and the incident of the pursuit of the sun are real facts.

The rest of the plot is introduced to give a compactness to the work. The secret society is introduced, for I could not imagine a better way of presenting matters, and I could not but think that the people were already prepared for the revolt. The political lecture of Vidyâranya is, in my opinion indispensable for the progress of the work.

The historical romance is novel to Tamil. This is t first of its kind ; whether it a success or a failiure remain to be seen.

I remain
Yours obediently,
C. R. SREENIVASA IYANGAR

10*th May* 1901
MADRAS.

# வித்யாரண்யநகரம்.

## அத்தியாயம் 1.

### ஹரிஹரன் தூது.

முன்னம் புகழோங்கி வளர்ந்திருந்த ஆனேகுந்தி என்னும் நகரத்தில் ஒருவன் தெருநடுவில், மிகுந்தமனக்கலக்கத்தை அறிவிக்கும் வதனத்துடன், சிறிதும்பின்னாவது பக்கங்களிலாவது திரும்பாது மெல்ல மெல்லப்போய்க் கொண்டிருந்தான். இரவிற்பதினைந்து நாழிகைக்குமேல் ஆய்விட்டது. மலைகளுக்கு நடுவில் ஆனேகுந்தி இருப்பதனால், மார்கழிமாதத்து நள்ளிரவில் வெளிக்கிளம்புவோர் எவரையுங் குளிரால் நடுக்கமுறச்செய்யும்பனி, அந்நகரத்தை ஒருவஸ்திரத்தாற் போர்ப்பதுபோல, போர்த்துக்கொண்டிருந்தது. அந்நகரத்தில் வீட்டிற்கலக்கமற்றுத் தூங்குவோர் ஒருவருமில்லை. வீட்டுக்கு வெளிக்கதவு மாத்திரம் தாழ்கோத்தடைக்கப்பட்டிருந்ததே தவிர, உள்ளே இருப்போர்கள் கலக்கமற்றிருக்கவில்லை. தெருவிற் போட்டிருந்த வெளிச்சங்கள் பனிமிகுதியாற் பிரகாசங்குன்றி, தெருவில்நடப்போர்க்குச் சற்றும்உதவியில்லாமலிருந்தன. நகரத்துக்கு வெளியிலோ உயர்ந்தகுன்றங்களிற் பெரும் பெரு வெளிச்சங்கள் கணக்கில்லாமற் போடப்பட்டிருந்தன. அவ்வெளிச்சங்களின் பிரகாசம்பனியினதுபோர்ப்பைக் கிழித்து ஆனேகுந்திநகரம் முழுவதும் பிரகாசத்தைக் கொ

டுத்தன. தெருவிலே, நாம்முன்னமேசொன்னபடி, அவ்வொருவனைத்தவிர வேறெவருங் காணப்படவில்லை. தண்ணீரிற்பாம்பு செல்வதுபோல் நேராகச்சென்ற அவன், இரவில் நாழிகை தெரியவேண்டுவதற்காக மேலேபார்த்தான். ஆகா! என்னகாட்சி! ஆகாயத்தில் நக்ஷத்திரங்களொன்றுங்காணப்படவில்லை. ஒரேவெளுப்பாய் இருந்தது. சிற்சில இடங்களில் மாத்திரம், பெரும்புகைவண்டியிலிருந்து புகை கிளம்புவதுபோலப்பெரும் பெருந் திரள்கள் ஆகாயத்திற் போய்க்கொண்டிருந்தன. அவ்வெளிச்சங்கள் ஆகாயத்திற்கே பளபளப்பைக் கொடுத்தன. அப்பிரகாசங்கள் பரந்தும் கரடுமுரடுமாயிருந்த குன்றுகள் நெருங்கிய நிலத்தை, அவன் கண்களுக்குப் புலப்படுத்தின. தாழ்ந்தவும் உயர்ந்தவுமான வீடுகள் பலவற்றைப்புலப்படுத்தின. நெடியுவுங்குறியவுமான கணக்கில்லாக் குன்றங்களைக் கண்ணுக்குத் தெரியப்படுத்தின. பருத்தும் உயர்ந்துங்கிளைகளாலகன்றும் பெரிதுஞ் சிறிதுமான அளவற்ற விருக்ஷங்கள் ஆகாயத்திற்கு எதிரே, கரேலென்று நிற்பதைத்தெளிவாய் எடுத்துகாட்டின. சுற்றிலுள்ள குன்றங்களின் மிகுதியும், மரங்களின்பெருமையும், படிப்படியாய்த்தாழ்ந்து சமநிலத்துக்கு வரும்வரைக்கும் குன்றுகளில் மரம் அடர்ந்திருப்பதும், அப்பொழுதுதான் கிளம்பியசந்திரன் மெல்ல மெல்லத்தனது குளிர்ந்த கிரணங்களை அவ்விருள் சூழ்ந்தநகரத்திற் செலுத்தியதும், பட்டணத்தின் விசாலமும், அந்நகரத்து மாடங்களின் உயர்ச்சியும், எல்லாம் ஒருங்குசேர்ந்து, அந்நகரத்தால் நாட்டிற்கே, பின்வரும் பெருமையினது அறிகுறியாய் ஹரிஹரனது குழம்பிய மனத்திற்குத் தோற்றின. இவையெல்லாம்பார்த்துச் சென்ற

ஹரிஹரன், தன்நாட்டிற்குப்பின்வரும் பெருமையைப்பற்றி நினைந்து ஓர் ஆனந்தப் பெருமூச்சுவிட்டான்.

வெகுநேரம் நடந்தாய்விட்டது. இன்னமும் அவன் தேடிச்சென்ற இடம் நெருங்கவில்லை. இருப்பிடம் விட்டுக்கிளம்பி மூன்றுநாழிகைக்குமேல் ஆயிற்று. சிறிதுஞ்சலியாமல் நடந்துகொண்டே போயினன். ஊர்நடுவிலுள்ள சிற்றாற்றுப் பாலத்தருகில் நியமிக்கப்பட்டிருக்குங் காவலாளன் ஹரிஹரனைத் தனது வாளாற்றடுத்து அவ்வழிப்போகலாகாதென்றான்.

"நீயார் என்னைத்தடுப்பதற்கு?" என்றான்.

"நீ அதைக் கேட்கவேண்டுவது அனாவசியம்"

"நான் போவேன். நீ செய்வதைச் செய்துகொள்"

"நீ போவாயாகில் உன்னை என்கைவாளால் வீசிவிடுவேன்"

"வீசுவையா?"

"ஆமாம் உடல், தலை, துண்டித்துவிடுவேன்"

"அடா போக்கிலி. வீணாய்க்கெடுவாய்"

"நீயன்றோ உயிர்துறப்பாய்?"

"நானாதுறப்பேன்!" என்று வெகுகோபத்துடன் சொல்லி, தனது உடைவாளைப் பையினின்று மெடுத்து ஹரிஹரன் காவற்காரன்மேற் பாய்ந்தான். இருவருக்கும் வெகுநேரம் யுத்தம்நடந்தது. கடைசியாக ஹரிஹரன் காவற்காரனைக் கீழேதள்ளி, அவன்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு,

"அடா, என்ன சொல்லுகிறாய்? உன் தலையன்றோ இப்பொழுது துண்டிக்கப்படப் போகிறது. அதிருக்கட்டும். நீ செய்வது யார் உத்தரவின்பேரில்?" என்றான்.

"மகாராஜா அவர்கள் உத்தரவன்றோ இது" என்றான் காவற்காரன்.

"மகாராஜா அவர்களுடைய சேனாதிபதி யார் தெரியுமா?"

"தெரியும்."

"பெயர் சொல்லு?"

"யாரோ ஹரிஹரராம்."

"நான்தான் அந்தஹரிஹரன்."

"தாங்களா? என்னை மன்னிக்கவும்."

"மன்னிப்பதா! நீ நல்லவீரனன்றோ? நீ எப்படிக் காவற்காக்கிறாய் என்பதைப்பார்ப்பதற்காக உன்னோடு சண்டையிட்டேன். உனக்கு ராஜபக்திமிகுதியா யிருக்கிறது. உன்னை எனது ஆளாகவே வைத்துக்கொள்வேன். உன்னைக்கொல்வதற்குச் சிறிதேனும் யான் உத்தேசிக்கவில்லை. என்னுடன்கூடக் கம்பிலத்திற்கு வருவாயா?" என்று சொல்லிக்கொண்டே எழுந்து நின்றுகொண்டு, அக்காவலாளனதுபோர்த்திறத்தை மிகவும் மெச்சினான்.

"யான் தங்கள் கட்டளைக்குப்பணிந்து நடப்பதற்குச் சந்நத்தமாயிருக்கிறேன்" என்றான் காவலாளன்.

"இன்னும் இரண்டுநாழிகைக்கெல்லாம் புறப்படுவதற்குத்தயாராயிரு இப்பாலத்தண்டை நான்வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வேகமாய்ப் போய்விட்டான்.

"சுந்தரி, யாரோ கதவைத்தட்டுகிறார்கள்பார்" என்று ஹரிஹரன் போகும்வீதியில், விஜயை மாடத்திலிருந்து சொன்னாள்.

"ஒருவரும் இல்லைபோலிருக்கிறதே" என்றாள் சுந்தரி.

"இல்லைபாரு."

"இதோ, பார்க்கிறேன்" என்றுசொல்லிவிட்டு, வாசற்கதவைத்திறந்து பார்த்தாள் பிறகு ஒருவரையுங்காணுமல் "ஒருவருமில்லையம்மா, பொழுதுவிடியும்நேரமாயிற்றே. நீங்கள்தூங்குங்கள்; நான் தங்களை யெழுப்புகிறேன்" என்ருள்.

"நான் தூங்குவதற்கென்ன? தினந்தான் தூக்கமாயிருக்கிறதே. இன்றுஇராத்திரித்தானேபோவதாகச்சொன்னார்?" என்று வினவினுள் விஜயை.

"ஆமாம்" "ஏன்! இன்னும்வரக்காணேனே என்னைமறந்தாரோ? மறவேன்—"

அப்பொழுது கதவைத்தட்டியவோசை யொன்றுகேட்டது. "சுந்தரி எழுந்திரு" என்ருள் விஜயை.

"இதோவந்தேன்" என்றுவிட்டு, சரேலெனப்போய்த்தாழெடுத்து வாசற்கதவைத்திறந்தாள். திறந்ததும் ஹரிஹரன் உள்ளேவர, கதவைச்சாத்தித் திரும்பவுந்தாழ்கோத்துவிட்டுச் சுந்தரி உள்ளேபோய்ப் படுத்துறங்கிவிட்டாள். ஹரிஹரன் நேராக விஜயையது அறைக்குட்சென்று அங்கேபோட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். சிறிது நேரம் இருவரும் பேசாமலே இருந்தார்கள்.

பிறகு "இன்னமுமா நீவிழித்துக்கொண்டிருக்கிருய்?" என்ருன் ஹரிஹரன்.

"தாங்கள் வரக்காணுமே என்றுபார்த்துக்கொண்டிருந்தேன்" என்ருள் விஜயை.

"இந்நேரம் வரைக்குமா?"

"வெகுநேரமாய் விட்டதா என்ன?"

"பொழுது விடியப்போகிறதே?"

"ஆனாலென்ன? தங்களைப்பணிந்த எனக்குத் தங்களைக் கண்டால் எவ்விதத்துன்பமும் மாறிவிடுமென்றோ?"

"நீமெல்லியை; உன்தேகம் இவ்விதமான வருத்தம் தாங்காது. நான் இங்கே இருப்பதற்கில்லை. நாளைப்பொழுதிற்குட் கம்பிலத்திற்குப்போய்ச் சேரவேண்டும். நான் போய்வரட்டுமா?"

"தாங்களுஞ்சிறிதும் உறங்கவில்லைபோலிருக்கிறதே?"

"ஆமாம் எனது கடமையைப்பூர்த்தி செய்யவேண்டாமா? எனது நாட்டிற்கு என்னைத்தவிரயார் உழைப்பார்கள்?"

"கொஞ்சம் சிற்றுண்டி சாப்பிடுங்கள்" எனச்சொல்லி, உள்ளேபோய் நானாவிதப்பழங்களும், ஒருஸ்வர்ணபாத்திரத்திற்பாலுங் கொண்டுவந்து கொடுத்தாள்,

ஹரிஹரனுக்குப் பசிமிகுதியாயிருந்தது. காவலாளனோடு சண்டையிட்டபிறகு மிகவும் இளைப்புற்றிருந்தான். ஆகையாற் சரசரவென்று அவள்கொண்டுவந்துகொடுத்ததை யெல்லாம் தின்றுவிட்டான். "இன்னுங் கொஞ்சங்கொண்டுவரலாமா?" என்றுவிஜயை கேட்டாள்.

"வேண்டாம் இதுவேபோதும்" என்றுசொன்னான் ஹரிஹரன்.

"நீங்கள் எப்பொழுது திரும்புவீர்கள்?"

"மூன்றுநாட் சாயங்காலம்"

"போர்நடக்கும்போல் தான் இருக்கிறதோ?"

"அப்படித்தான் தோற்றுகிறது"

"தெய்வமே, இச்சச்சரவில்லாமல் உலகத்தைவைக்க மாட்டாயா? நாதா! இப்பெரும்போரினின்றும் உயிர்பிழை

த்துத் திரும்பவேண்டுமே! தாங்கள் போரையெப்படியாவது விலக்கலாகாதா?"

"அதுமுடியாதகாரியம். துருக்கன் வெகுகொடியன் போலும். முதலிற் கம்பிலத்தரசனை, பகவுத்தீனை விட்டுவிடென்றுகேட்டான். அதற்கு அவன் ஒப்புக்கொள்ளவும் இப்பொழுது நீ எனக்குப் பணிந்திருக்கவேண்டுமென்கின்றான். இப்பொழுது, போர்புரியவேண்டும், அல்லது அவனுக்குப் பணிந்திருக்கவேண்டும்."

"கீழ்ப்படிந்திருப்பதிலும், போர்புரிந்திறப்பதே நன்று. அப்படித்துருக்கன் நிச்சயமாய்ச் சொல்லிவிட்டானோ?"

"இன்னுமில்லை; நாளைப்பொழுதிற்குள் முடிவு எல்லாருக்குந்தெரிந்துவிடும்."

"நாம் என் போர்புரியவேண்டும்?"

"நமது நாட்டையும் இவ்விதந்தானே நாளைக்குக் கைப்பற்றிக்கொள்ளுவான்."

"அது என்ன நிச்சயமா?"

"நிச்சயந்தான், அதற்கு இப்பொழுது இருவருஞ் சேர்ந்து அவனை எதிர்த்தால் ஒருவேளை அவனை வெருட்டி ஓட்டிவிடலாம். மேலும், கம்பிலநாட்டார் நமக்கு நிரம்பவும் ஆப்தர்கள் அல்லரோ?"

"இப்பொழுது பகவுத்தீன் எங்கே இருக்கிறான்?"

"கம்பில நாட்டிலேயேதான்."

"அவனை நாட்டைவிட்டு விலகச்சொல்லுவதற்கு என்னதடை?"

"அவனைப்போகச் சொல்லுவதிற் பயனென்ன?"

"ஒருவேளை நமதுவிரோதி நம்மேற் படையெடாமல் இருக்கலாம்."

"அப்படிச் சொப்பனத்திலும் நினைக்கவேண்டுவதில்லை."

"ஏன்?"

"நமது ஊர்களைக்கைப்பற்றிக் கொள்ளவேண்டுமென்பது அவனுடைய முக்கியமானகருத்து."

"ஆனால் சரி, நம்மால் ஆனவரையிற் சண்டைபோட்டு வெற்றியடையும்படி, கடவுள் அனுக்கிரகிக்கவேண்டும். எனது குலதெய்வமே! என்னைக்காப்பாற்றுவாயாக; எனது நாதனைத் துன்பங்களினின்றும் விடுவிப்பாய்! எனது நாட்டிற்குஞ் சுகந்தருவாய்."

"விஜயை, நான்போய்வருகிறேன்"

"சற்றுநேரம் போகட்டுமே."

"அதோபார். சுக்கிரன் உதித்துவிட்டான்"

"ஐயோ! தங்களை வெகுகாலம் பிரிந்திருக்கும்படியாய் வருமோ என்னவோ, தெரியவில்லையே"

"இல்லை. சீக்கிரம் வந்து விடுகிறேன்"

"தாங்கள் அங்கே இருக்கும்பொழுது எதிரிகம்பிலத்துக்கு வந்துவிட்டால்—?"

"எப்படி யிருக்கினும் போர் தொடங்குவதற்குமுன் உன்னைவந்துபார்த்துவிட்டுப் போகிறேன்"

"அரண்மனைக்குப் போவீர்களோ?"

"இல்லை; உன் தந்தையெங்கே?"

"கிராமத்திற்குப் போயிருக்கிறார்."

"நீ எனக்கு வாக்குக்கொடுத்திருப்பது அவருக்குத் தெரியுமா?"

"தெரியாது."

"உன் தாய்க்குத் தெரியுமா?"

"தெரியாது."

"அவர்களுக்கு நீ என்னை மணஞ்செய்து கொள்ளுவது இஷ்டமில்லாவிடில் என்ன செய்வாய்?"

"என்னை!"

"நீசெய்வது என்ன?"

"என்னவோ? தங்கள்முகந்தவிர வேறொருமுகத்தையும்பாரேன். தங்களைத்தவிர வேறு யாரையும் மணஞ்செய்து கொள்ளேன்."

"நான் போய்வருகிறேன்"

"சற்றுப்பொறுங்கள். தங்களுக்கு ஏதாவது நேரிடில் எனக்குச் செய்திசொல்லி யனுப்புவீர்களோ?"

"ஆகட்டும்."

"மறந்துவிடமாட்டீர்களே?"

"உன்னையா?"

"பாவிப்போரிற்குப் போகவாவேண்டும்?"

"முன்னமே சொன்னேனே."

"ஆமாம், தன் நலத்திலும், ஊர் நலம்பெரிதன்றோ. ஆனால் என்மனம்பதைக்கிறது"

"வீண்துயரப்படாதை."

என்று சொல்லிவிட்டு ஹரிஹரன் சிறிதுஞ் சப்தஞ்செய்யாமல், வீட்டைவிட்டு வெளியேவந்தான்.

அதிகப் பிரகாச மில்லாதிருந்த சந்திரிகையில் தன் கண்ணுக்கெட்டியமட்டும் மாடத்திலிருந்துகொண்டு, ஹரிஹரன் உருவத்தை விஜயைபார்த்துக்கொண்டே இருந்தாள். சற்றுநேரத்துக்கெல்லாம், ஹரிஹரன் உருவம்மறை

ந்து விட்டது. மறைந்ததுஞ் சிறிது பொழுது வாய்திறவாமலும், அசையாமலும், தனதுஅமளியில் விஜயை உட்கார்ந்து கொண்டிருந்தாள். இரவுமுழுவதும் விழித்ததனாலுண்டாய சோர்வினால், மெல்லமளியிற் படுத்துறங்கிவிட்டாள்.

ஹரிஹரன் பாலத்தண்டை சென்றான். அங்கே இப்பொழுது சேவகன்மாத்திரமன்றிச் சேவகனோடு தனது சகோதரனாகிய புக்கனும் இருந்தான். ஹரிஹரன் இருவர் நின்றுகொண் டிருப்பதைப்பார்த்து,

"யார் அங்கே?" என்று வினவினன்.

"அண்ணா, நான்தான்" என்றான் புக்கன்.

"புக்கா!"

"ஏன்?"

" எங்கேவந்தாய்?"

"இரவில் எனக்குத்தூக்கமே வரவில்லை. தாங்கள் கம்பிலஞ் சென்றுவிட்டீர்களோ என்று விசாரித்துப் போவோம் என்றெழுந்து பாலத்தண்டைவந்தேன். காவற்காரன் தாங்கள் திரும்பிவருவதாகச் சொன்னீர்களென்றான். ஆகையால் இங்கேயே காத்துக்கொண்டிருந்தேன்"

"வெகுநேரம் ஆயிற்றோ?"

"இல்லை"

"தாங்கள் போன கால்நாழிகைக்கெல்லாம் இவர் இவ்விடம் வந்துவிட்டார்" என்றான் காவற்காரன்.

"புக்கா! அரண்மனை விஷயம் ஏதாவது தெரியுமோ?"

"நேற்றிரவு ஆலோசனை சபையார் கூடினார்கள்."

"சரி."

"சிலர் நாம்கம்பிலநாட்டாரோடு சேரவேண்டாம் என்றார்கள். ஆனால் அவர்கள் கட்சி நிலைக்கவில்லை."

"உள்ளே வரலாமா? கேள்" என்றார்.

அவன் உள்ளேபோய்,

"மஹாராஜா தங்கள் மந்திரி உள்ளேவரலாமா என்று கேட்கிறார்" என்றான்.

"வரச்சொல்" என்று டொக்லாக் சொல்ல, மந்திரியும் உள்ளே வந்தார். உடனே,

"இதுவரையில் நடவாதகாரியம் ஒன்று இன்றைக்கு நடந்தது" என்று, கண்கள் கொவ்வைப்பழம்போற் சிவந்திருக்க, அங்கங்கள் பதறச்சொன்னான்.

"மஹாராஜ், என்ன?"

"என் கண்ணைப்பார்த்தீரா?"

"கண்கள் சிவந்திருக்கின்றன."

"ஏன் தெரியுமா?"

"தெரியவில்லையே."

"அச்சாளரத்தின் ஒட்டைவழியாய் ஒருவன் வந்து என் கண்ணை நெருப்புக்கோலாற் சுட்டுவிட்டான்."

"எங்கே அவன்?"

"மறுபடியும் அச்சந்தின்வழியாகவே ஓடிப்போய் விட்டான்." இச்சமயத்தில், அம்மாளிகையினது அருகிலுள்ள மரங்களிற் காற்றுவீச, இலைகளெல்லாம் அசைந்தன. அசைந்தபொழுது சூரியகிரணமொன்று சாளரத்துச் சந்தின் நேராகவந்து உள்ளேவீசிற்று. மறுபடியும் மரத்திலைகள் தங்கள் முன்நிலைக்கு வரக் கிரணமும் மறைந்தது. அக்கிரணங்காணப்பட்டவுடன், டொக்லாக்,

"இவன்தான், இவன்தான்" என்றான்.

"யார்? யார்?" என்றார் மந்திரி.

"என் கண்ணைச்சுட்டவன். பிடி, பிடி."

"பிடிக்க முடியவில்லையே"

"உன்னால் என்ன உபயோகம்?"

"மகராஜா! தங்களாலேயே பிடிக்க முடியவில்லையே! என்னால் அது சாத்தியமா?"

"நீ சொல்வதுஞ்சரிதான். அவனை எப்படியாவது நான் பிடித்துச் சிக்ஷிப்பேன், நீ சைனியங்களைத்திரட்டு, இன்னும் இரண்டுநாழிகைக்குட் கிளம்பவேண்டும்."

"இவன்தான், இவன்தான்" என்றுசொன்னது முதல் மந்திரிக்குச்சிரிப்பு அடக்கவே முடியவில்லை. ஆனாற் சிரித்தாற் கொன்றுவிடுவான். அதற்காக வாயை மூடிக்கொண்டிருந்தார். டொக்லாக் சைனியத்தைத் திரட்டு என்று சொன்னவுடன்,

"மஹாராஜா, அது சூரியகிரணமன்றோ?"

"என்ன?"

"சூரியனை நாம் பிடிக்க முடியாது."

"பைத்தியம் பிடித்திருக்கிறதா என்ன உனக்கு?"

"தங்கள் சித்தம்?"

"யாராற் பிடிக்கமுடியாது?"

"யாவராலும்."

'என்ன தெரியுமுனக்கு?"

"இல்லை—"

"என்னாற்கூடவா?"

"மஹாராஜா, அவன் ஆகாயத்திலன்றோ இருக்கிறான்?"

"இருந்தாலென்ன?"

"நாம் ஆகாயத்தில் எப்படிச்செல்லமுடியும்?"

"அது எப்படியோ நான் செல்லுவேன். நீயார் அதைக்கேட்பதற்கு? நான் சொல்லியபடி செய்."

“செய்தேன், மஹராஜ்” என்று சொல்லிப் போய்விட்டான். மந்திரிசேனுதிபதியைக்கூப்பிட்டு அரசனது உத்தரவை வெளியிட்டார். அச்செய்தியை யவர்வெளியிட்டதும், “இன்னும் இரண்டுநாழிகைக்குள் எல்லாரும்போர்க்கோலத்துடன் பயணத்துக்கு ஆயத்தமாயிருக்கவேண்டும்” என்று எங்கும் பறையடிக்கப்பட்டது. பறையோசை எல்லோருக்கும் அடிவயற்றில் நெருப்புவிழுந்தாற்போல் விழுந்தது; ஆயினும் அரசன்உத்தரவுக்கு மீறிநடந்தாற் கடுந்தண்டனை விதிக்கப்படுமென்று பயந்து எல்லாரும் உடனே கண்களில் நீர்ப்பெருக்குடன் பயணத்துக்கு ஆயத்தமாயிருந்தார்கள்.

ஆனல் மந்திரிக்கோ மனம் மிகவுங்குழம்பியே யிருந்தது. இன்னது செய்வதென்று தெரியவில்லை. அரசனே புத்திஹீனன். மூடத்தனமாய்ச் சும்மா கிழக்குசமுத்திரம் வரையிற் போய்க் கொண்டிருந்தால் எவ்வளவு பொருள் நஷ்டமும், பிரஜாநஷ்டமும் நேரிடும்! அதை எப்படி மாற்றுவிக்கலாம்? என்று மனங்குழம்பிக் குழம்பித் தவித்துக் கொண்டிருக்குஞ் சமயத்திற், புறப்படுவதற்கு அறிகுறியாகச் சங்கசப்தங்கேட்டது. உடனே மந்திரி அரசனுடன் கூடவே புறப்பட்டார். ஆனல் அவர் தீர்க்காலோசனையிலாழ்ந்தார். எங்கேபோகிறோமென்பது அரசனுக்கும் மந்திரிக்குந்தவிர வேறுஎவருக்குந்தெரியாது. கீழ்ப்பக்கமாய்ப் போய்க்கொண் டிருந்தார்களென்பது தெரியுமே தவிர வேறொன்றுந்தெரியாது.

இவ்விதம் இரண்டு மூன்று நாழிகை சென்றபிறகு மந்திரிக்கு ஓர் யோசனை தோன்றிற்று. சேனைத்திரள் மிகுதியாயிருந்ததனல், அவர்கள் புறப்பட்டு இரண்டுநாழிகைக்கெல்லாம் கிளம்பியிருந்த தூளி ஆகாயத்திற்பரவச் சூரி

யன்மறைந்தான். இதைப்பார்த்ததும் மந்திரி அரசனிடம் விரைந்தோடி,

"மஹாராஜ்—"என்று சொல்லுமுன்னம்,

"என்னசெய்திசொல்லவந்தாய்?" என்ருன்டொக்லாக்.

"ஓடி விட்டான் அவன்."

"எவன்?"

"அச்சூரியன்."

"எங்கே?"

"எங்கேயோ ஓடிவிட்டான்."

"பின்தொடருவோம் நாம்."

"எதற்காக?"

"அவனை விடலாகாது."

"என்ன தாங்கள்கூட அப்படிச்சொல்லுகிறீர்கள் ?"

"என்ன சொல்லுகிருய்?"

"முதுகுபுறங்காட்டி ஓடுகிறவர்களை வீரராயிருப்போர் பின் தொடருவார்களா?"

"ஆமாம்."

"சூரியன், தங்களிடம் பயந்து ஓடிவிட்டான். நாம்தாம் வெற்றிபெற்று விட்டோமே."

"நல்லது மந்திரி"

"படைகளை நிற்கச்சொல்லுவோமா?"

"அப்படியே"

"மேல், நாம் பாலகாட் மலைச்சாரலண்டை போவோம், கம்பிலநகரத்தரசன் தூதன்வரும் வழி அதுதான்."

"சரி அப்படியே செய்வோம்."

"மஹாராஜா, தாங்கள்பிடித்ததைப் பூர்த்திசெய்தீர்களே, அதை நினைக்க நினைக்கத்தான் எனது மனம் பூரிக்கிறது."

"உன்னைப்போல் மந்திரி இருந்தால் எனக்குச் சுகம் வருவதற்குத் தடையென்ன?"

"இதோவந்தேன் மஹராஜ," என்று சொல்லிவிட்டு, மந்திரி சேனாதிபதியிடம் வேகமாய்ச்சென்று,

"பாலகாட் பக்கம் படையைத்திருப்புங்கள்" என்றார்.

"இப்பொழுது எங்கே சென்றோம்?" என்று சேனாதிபதிகேட்க,

"சூரியன்மேற் படையெடுத்துச் சென்றோம்" என்று சொல்லிக் கல கல வென்று நகைத்தார்.

உடனே சேனாதிபதி சிரிப்பை அடக்கமுடியாமல் வெகுநேரஞ்சிரித்தார். பிறகு,

"சூரியனிடமா?" என்றார் மீண்டும்.

"ஆமாம் ஐயா, ஏதோ நமது மடையனைச் சரிப்படுத்தினேன். சூரியன் தூளியால் மறைப்புண்டதை, சூரியன் ஓடியதாக அவனிடஞ்சொன்னேன்."

உடனே பாலகாட்பக்கம் சேனாதிபதி படையைத்திருப்பினார்.

மூன்றுநாட் பயணத்துக்கெல்லாம், சேனாதிபதியாகிய மாலிக்நாயப், பாலகாட் மலைச்சாரலண்டைவந்து சேர்ந்தார். அங்கிருந்துநேரே கம்பிலத்துக்குப் போவது அசாத்தியமாய்த் தோன்றியதனால், ஆமத்நகரத்துக்குப் போய்ப் போகலாமென்று நிச்சயித்துக்கொண்டு, இரண்டுநாள்களுக்கெல்லாம், சைனியம் எல்லாவற்றுடனும் ஆமத்நகரத்துக்கு அருகிற் றங்கினார். அந்நகரத்தண்டை தங்கினதும், யாவருக்கும் மிகுந்த களைப்பாயிருந்ததனால், அவ்விடத்தைவிட்டு, வருகிற சிலநாட்களுக்குப்புறப்படுவதற்கே இஷ்டமில்லை.

அவர்கள் அவ்விடத்திற்றங்கியதும், அவரவர்கள் தங்களதுகளைப்பை ஆற்றிக்கொள்வதிலேயே திருஷ்டியாய் இருந்தார்கள் ஒவ்வொருவருக்கும் மற்றவரைப்பற்றி ஒன்றுந்தெரியாது;வந்துதங்கிய அன்றுஇராத்திரி, இரண்டுமூன்றுதுப்பாக்கிகள் சுட்டசப்தமாத்திரங் காதிற்கேட்டது. அச்சப்தங்காதிற்பட்டதும் மற்றுஞ்சிலர் எழுந்து அச்சப்தம் வந்தவழியே ஓடினார்கள். அவர்கள் ஓடினதும், அவர்களுள் ஒருவன்,

"என்ன, என்னசமாசாரம்? என்றான்.

"ஷேயிக்மகம்மது" என்றான், சிறைக்காவலாளன்.

"யார் அவன்?"

"சிறையிலிருந்தான்—"

"எங்கே?"

"ஓடிவிட்டான்"

"நீ என்ன செய்தாய்?"

"என் துப்பாக்கியைப்பிடுங்கி, என்னைச்சுடுவதற்குப் பார்த்தான். ஆனால் தெய்வவசத்தாற் தப்பினேன்."

"எப்பொழுது ஓடினான்?"

"இப்பொழுதுதான்."

"எதற்காகச் சிறையிலடைக்கப்பட்டிருந்தான்?"

"எதற்காகவோ?"

"யார் உத்தரவின்பேரிற் சிறையில் அடைபட்டிருந்தான்?"

"அரசன் உத்தரவின்பேரில்."

"அவன் நமது பகைவனா?"

"அல்லன்"

"பின்னை யார் அவன்?"

"அரசனது காவலாளன்"

"அடடா! அரசன் நம்மைக்கொன்று விடுவானே?"

"ஐயோ, அதற்காகத்தான் என் நெஞ்சங்கலங்குகிறது?"

"யாரடா ஆட்கள்; ஓடுங்கள், நாற்பக்கத்திலும் ஓடுங்கள். ஷெய்க்மகம்மதை எப்படியாவது பிடித்துவிடவேண்டும்" என்று பக்கத்திலிருப்போர்களை ஏவினன்.

அவன் ஏவினதும், எத்தனையோ பெயர்கள் குதிரைகள் மேல் ஏறிக்கொண்டு எல்லாப்பக்கத்திலும் ஓடினார்கள். அவர்களுக்குத்தலைவனான இவனும், விரைந்து தென்பக்கமாகச் சவாரிசெய்தான். அரைநாழிகைக்கு அவன் போகும் வழி முழுதும் நிச்சப்தமாயிருந்தது. பிறகு கொஞ்சத்தூரத்திலிருந்து, தென்பக்கமாகக் குதிரைச்சுவட்டோசை கேட்டது. அவ்வோசை கேட்டதும் இவனும் விரைந்துசென்றான். தனக்குப்பின்னால் ஏதோவோரோசைகேட்கவே, முன்னே குதிரையேறிச் சென்றவன் அதிவேகமாய்க் குதிரையைச் செலுத்தினன். ஆகவே இவ்விருவரும் ஒருவர் பின்னால் ஒருவர் அதிவேகமாய்ப்போய்க் கொண்டிருந்தார்கள். முதலில், இருவரும் ஒருவரையொருவர் அறிந்துகொண்டபொழுது எவ்வளவுதூரம் வித்தியாசமிருந்ததோ, அவ்வளவுதூரந்தானிப்பொழுதும் வித்தியாசமிருந்தது. முன்னே போவானாவது சிறிதுஞ் சலிக்கவில்லை. பின்னே வருபவனாவது, சிறிதும் வேகத்தையதிகரிக்கமுடியவில்லை. நான்குநாழிகைக்கு இவ்விருவரும் இம்மாதிரியேசென்றார்கள். குதிரை உடம்புமுழுவதும் வியர்த்துப் போய்விட்டது. வாயின் இருபக்கங்களிலும் நுரைததும்பிக் கொண்டிருந்தது. இருவரும் வெகுதளர்ச்சி யடைந்தார்கள். பின்வருவோனாகிய மகமது ஆலி "ஷெய்க், நின்றுவிடு, அரசன் கொஞ்சந்தண்டனையுடன்,

விட்டுவிடுவான்' இன்னமும் ஓடுவாயாகில், உன்சிரசைக் கண்டிதமாய்த் துண்டித்துவிடுவான். நில்லு, போகாதே, போகாதே" என்று உரத்திக்கத்தினன்.

"ஆலி, நான் நிற்கமாட்டேன், என்னை வந்து பிடித்துக்கொள்" என்று பதிற்சொல்லிவிட்டு, மறுபடியுங் குதிரையை விலாவிற்குத்தி வெருட்டினன். இருள் மிகுதியாயிருந்ததனுற் குதிரைக்குக் கண்தெரியவில்லை. அச்சாலைப்பக்கத்திலுள்ள ஒரு பெரியபள்ளத்துள் இவனையுந்தள்ளிக்கொண்டுதானும் விழுந்தது. இவன் விழுந்த மறுநிமிஷம் ஒரு பெருநகைகேட்டது. மகம்மது திரும்பிப்பார்த்தான். ஆலியும்வந்து நின்றான்.

"மகம்மது, இன்னமும் பயமில்லை, வந்துவிடு"என்றான்

"மாட்டேன்" என்றான் ஷெயிக்மகம்மது.

"சும்மா பதறாதே, என்னிடம் அகப்பட்டுவிட்டாய்"

"சரி, நான் உன்னிடம் அகப்பட்டுவிட்டாற் கொண்டுபோ"

"உன்னைக் கொன்றாலுங் கொன்றுவிடுவேன்."

"முடியுமானுற் செய்"

"உன்னைக்கொல்ல முடியாது?"

"சற்றுப்பார்"

"இதோ பார்த்தேன்"

என்று சொல்லிக்கொண்டு குதிரைமேலிருந்து திடீரெனக்கீழே குதித்து, மகம்மதண்டை துப்பாக்கியை நீட்டிக்கொண்டு ஓடிவந்தான்: மகம்மதோ அதிவேகமாய்த் தான் இருந்த இடம் விட்டுநீங்கி, ஆலியது துப்பாக்கியை அவன் கையினின்றும் பிடுங்கி, பக்கத்திலுள்ள வயலில் எறிந்து

விட்டான். பின்பு இருவரும் மல்லயுத்தஞ் செய்தார்கள். கடைசியாக, மகம்மது, ஆலியை நொறுக்கிவிட்டு,

"ஆலி நீ என்னோடு போர்செய்திருக்கவேண்டாம்" என்றான்.

"மகம்மது, அரசன் கட்டளைப்படி நான் நடக்கவேண்டாம்?"

"ஆமாம்."

"அதுதான் செய்தேன்."

"நீ இக்கதியடைந்தாயே யென்று பரிதவிக்கிறேன்."

"என்னசெய்வது, கடவுள் அன்றோ இவ்விதம் ஆக்ஞாபித்திருக்கிறார்"

"ஆலி, எழுந்திரு."

"முடியவில்லை."

"ஏன்?"

"என்கால் முறிந்துபோய்விட்டது."

"என் வஸ்திரத்தைக் கிழித்து, உன்காலினின்றும் இரத்தம் ஒழுகாதபடி கட்டிவிடட்டுமா?"

"செய், இதற்கு என்ன கைம்மாறு செய்வேன்"

"ஒன்றும் வேண்டாம்."

"மகம்மது, மிகத்தாகமாயிருக்கிறது, கொஞ்சம் தண்ணீர் கொண்டுவாராயாகில், நான் இக்கணமே இறந்துவிடுவேன்."

"இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லிவிட்டு, ஓடிப்போய் அண்டையிலிருந்த குளத்தண்டைபோய், அருகிலிருந்த தேக்கிலையைப்பறித்து அதைப்பாத்திரமாகச்செய்து, தண்ணீர் கொண்டுவந்து ஆலிவாயில்ஊற்றினான். பிறகு அவன் காற்காயத்தை நன்றாகக் கட்டினான். அப்புறம்,

"அப்பா ஆலி! நான் இங்கே இனி இருப்பேனாகில், என்னை யாராவது பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள். நான் போய்வரட்டுமா?" என்றான்

"போய் வா; உன் குதிரை யெங்கே?" என்றான் ஆலி.

"அஃது அப்பொழுதே இறந்ததே."

"ஆனால் என்குதிரையைக்கொண்டு போ."

"வந்தனம் தோழா!"

"கடவுள் உன்னைக்காப்பாற்றுவாராக. நீ எங்கேயாவது போய், நலமடைவாயென்று நம்புகிறேன்; போ சீக்கிரம்; யாரேனும் வரப்போகிறார்கள்" என்று சொல்லி மகம்மதைத் தன்குதிரையைக்கொடுத்தனுப்பிவிட்டான்.

பொழுதுவிடிந்ததும், அச்சாலைவழியாக இரண்டு குதிரைகள்கட்டிய வண்டியும், அதன் முன்னும் பின்னும் நான்கு ஆட்கள் குதிரைகள்மேலுஞ் சென்றார்கள். போகும்பொழுது, வழியில்ஆலிகிடப்பதை வண்டியிலிருந்த ஒருவன் பார்த்து, வண்டியை நிறுத்தி இரண்டு பெயரைவிட்டு அவனை வண்டிக்குட் கொண்டுவந்து போடச்சொன்னான். ஆலி தன் வரலாற்றை யெல்லாம் அவர்களுக்குச் சொன்னான். அதற்குள் வண்டியும் ஆமதுநகரம் வந்துசேர்ந்தது.

மகம்மது டொக்லாக் சபைநடுவில் உட்கார்ந்துகொண்டிருந்தான். காவலாளர்கள் உள்ளே வந்தார்கள். வந்ததும் அவனை மண்டிபோட்டு நமஸ்காரஞ்செய்தார்கள்.

"மஹாராஜ—" என்று ஆரம்பித்ததும்,

"என்ன! சொல்லுங்கள்" என்றான்.

"ஷெய்க்மகம்மது—"

"என்னசெய்தான்?"

"நேற்று—"

"சொல்லு சீக்கிரம்."

"இராத்திரி நாங்களெல்லோரும்—"

"சீக்கிரம், வெட்டிவிடுவேன்."

"எங்கள்காவலிடங்களி லிருந்தபொழுது, வாயிலிலிருந்த—"

"ஓடிவிட்டானே?"

"இல்லை வாயிலிலிருந்த காவலாளனது துப்பாக்கியை அவன் கையினின்றும்—"

"பிடுங்கினால் இவன் ஏன்சும்மாவிருந்தான்?"

"இல்லை பிடுங்கவில்லை. அவன்கையினின்றும் எடுத்தான்."

"மேல்."

"இவனைச் சுடப்பார்த்தான்."

"அவனோ?"

"ஆமாம் மகராஜ்; சுட்டான்."

"என்னதைரியம்! எங்கே அவன்? அவனை மிதித்துக் கொன்றுவிடுவேன்."

"அவன் இல்லையே."

"எங்கே அவன்? கொண்டுவா."

"அவன் இல்லை."

"இல்லையா?"

"நேற்றிரவு—"

"பதிற்சொல்லாதே; அவனை இங்கே கொண்டுவா."

"நாங்கள்தாம் சொன்னோமே."

"என்ன?"

"எங்கேயோ—" என்று சும்மாவிருந்தான்.

"ஏன் சும்மாயிருக்கிறாய்; ஓடிவிட்டானா?"

இதற்குப்பதில் சொல்லுவதற்குமுன், மந்திரி உள்ளேவந்து,

"மகராஜ்" என்றார்.

"நீங்கள் போய்வாருங்கள். அப்புறம் உங்களைவிசாரிப்பேன்" என்றுசொல்லிக் காவலாளர்களை யனுப்பிவிட்டு, மந்திரியைப்பார்த்து, "பிரதான்! என்ன விசேஷம்?" என்றான் மகம்மது டொக்லாக்.

"கம்பில நாட்டுத்தூதன் வந்திருக்கிறான்"

"என்ன சொல்லுகிறான்?"

"உள்ளே கூப்பிடுகிறேனே அவனை?"

"கூப்பிடு."

உடனே, மந்திரிவெளியேபோய் வரும்பொழுது நான்குபெயர்களை யழைத்துக்கொண்டு உள்ளேவந்தார். உள்ளேவந்ததும் அவர்கள் டொக்லாக்குக்குத் தலைவணங்கினார்கள்; டொக்லாக்கும் அவர்களுக்குத் தலைவணங்கினான்.

டொக்லாக் அவர்களை "என்னசெய்தி?" என்றுகேட்டான்.

அவன்கேட்டதும் அந்நால்வருள் அந்தணராகிய ஒருவர், "மஹாராஜா டொக்லாகுக்குக், கம்பிலம் மகாராஜா சொல்லிக்கொள்வதென்ன வென்றால்:—

முதலாவது, பகவுத்தீனை எவ்விதத்திலுங் காப்பாற்றுவோம். இரண்டாவது, டெல்லி அரசனுக்குக்கீழ்ப்படியமாட்டோம். மூன்றாவது, டெல்லிஅரசன் நம்மைக்கீழ்ப்படிந்திருக்கச்சொன்னதற்காக அவன் நம்மை மன்னிப்புக்கேட்

டுக்கொள்ள வேண்டும் என்பவைதாம்” என்று சொல்லி விட்டுச் சும்மாவிருந்தார்.

டொக்லாக் வாய்திறக்கவில்லை. அவன் கண்கள் சிவந்து பருத்து, கொவ்வைப்பழம்போல் இருந்தன. அவனுக்குவாய்திறக்கத் தோற்றவில்லை. மீசைதுடித்து நின்றது. உடம்பில் தாரைதாரையாய் வியர்வை பெருகிக்கொண்டிருந்தது; மீசையை முறுக்கிக்கொண்டான்.

“சரி, சண்டைக்கு ஆயத்தமாயிருக்கச் சொல்லுங்கள் உங்கள் அரசனை” என்றுசொல்லி அவர்களையனுப்பி விட்டான். அவர்கள் போனதும்,

“மந்திரி, என்ன துணிவு பார்த்தாயா?”

“ஆமாம், மகராஜ்”

“நாம் அவனைச்சும்மாவிடலாமா?”

“ஆகவே ஆகாது”

“இன்றைக்கே புறப்படுவோமா”

“வேண்டாம், மஹாராஜ்”

“ஏன்?”

“எல்லோரும் களைத்திருக்கிறார்கள்.”

“ஆனல், மாலிக்நாயபை, நாளை அஸ்தமனத்துக்குப் புறப்படவேண்டுமென்றுசொல்லி, அவனைப்புறப்பாட்டுக்கு ஆயத்தமாய் இருக்கச்சொல்லு.”

“அப்படியே, மஹராஜ்” என்று மந்திரி சொல்லிவிட்டு, அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு, வெளியே வந்தார்.

## அத்தியாயம். 3.

### ஷேயிக்மகம்மது.

"நரசிங்கா! என்னடா சலசலவென ஓசைகேட்கின்றது" என்றான் ஹரிஹரன்.

"மஹாராஜ், எனக்குத் தெரியவில்லையே" என்றான் நரசிங்கன்.

"சும்மாவிரு."

"ஒன்றுமில்லை."

"சற்றுப்பொறு."

"இன்னுமில்லை."

"சும்மாவிரு, சும்மாவிரு."

"ஏதோசப்தம் என்காதிற்பட்டது."

"இல்லையே."

"இன்னுங் கவனித்துக்கேள்."

"அப்படியே, மஹாராஜ்."

"கேட்கிறாயோ?"

"ஆமாம் ஸ்வாமி."

"அஃது என்னவாயிருக்கலாம்?"

"பாம்பாயிருக்குமா?"

"புலியாயிருக்குமா? சப்தம்பலமாயிருக்கிறதே"

"ஆமாம், மரத்தண்டை மறைந்திருப்போம்"

"சரி."

"வேண்டாம், வேண்டாம்."

"ஏன் அப்பா?"

"ஒருகுதிரையைக் காண்கிறேன்."

"மேமேல ஒருவருமில்லையா?"

"தெரியவில்லை, மிக இருட்டாய் இருக்கிறது."

"எனக்குந் தெரியவில்லை."

"சற்று உற்றுப்பார்ப்போம்."

"பேசாதே."

"யாரேனுங் கூடவரலாம்."

"இரு, இரு,பார்க்கிறேன்."

"மேலே ஒருவன் ஏறிவருகிருன்."

"நம்மவனு?"

"இல்லைபோல் இருக்கிறது."

"யார் அவன்? நான்பார்க்கிறேன். நரசிங்கா! துருக்கனடா அவன்; யாரேனும் ஒற்றன் அறிவித்ததன் பேரில், டெல்லி அரசன் நம்மைக்கொல்ல இவனை அனுப்பினுன்போலும். நரசிங்கா! வாளைஉருவிச் சாக்கிரதையாய் வைத்துக்கொள்."

"வைத்துக்கொண்டேன்" என்றுசொல்லி நரசிங்கன் வாளையுருவிக் கையில்வைத்துக்கொண்டான். ஹரிஹரனும் தனதுவாளைக் கையிலெடுத்துக்கொண்டான். இவர்கள் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, முகமெல்லாம் வாடி, உடம்பிற் சிறிதுஞ்சக்தியற்றவன்போல இருந்துகொண்டு, ஷெய்க்மகம்மது இவர்கள் பக்கம் நெருங்கிக்கொண்டிருந்தான்.

"யார் அங்கே?" என்ருன் ஷெய்க் மகம்மது.

அதற்குள் நரசிங்கன் அவன்கையிலிருந்த துப்பாக்கியைப்பார்த்து விட்டு,

"ஸ்வாமி, மோசம்போனேம்" என்ருன்.

"என்னமோசம்?" என்றான் ஹரிஹரன்.

"நம்கையில் துப்பாக்கியில்லையே" எனத்தேம்பினான்.

"நரசிங்கா, பயப்படாதே."

"இல்லை மகராஜ்."

"என்னிடமிருக்கிறது."

"சரி ஆனாற்பயமில்லை."

இப்படிப்பேசிக்கொண்டிருக்கிறபொழுது மகம்மது, "யார் இங்கே?" என்றான் திரும்பவும்.

"நீயார்?" என்றான் ஹரிஹரன்.

"நீயார்? சொல்."

"சொல்ல மாட்டோம்."

"ஐயா, நான் உங்களுடையசிநேகிதன்."

"என்ன!" என்றான் ஹரிஹரன்.

"உங்களுடைய சிநேகிதன்."

"நாங்கள்யார்?"

"ஆனைகுந்தி நாட்டார்."

"நீ துருக்கனல்லை?"

"ஆமாம்."

"எங்கள் சிநேகிதன் என்கின்றாயே"

"ஆமாம், நான் உங்களுடைய விரோதியின் விரோதி.

"நீபேசுவது சத்தியமா?"

"ஆமாம், சத்தியம் அல்லாவறியச் சத்தியம்."

"உன்பெயர் என்ன?"

"மகம்மது ஷெயிக்."

"ஏன் நீ இங்குவந்தாய்?"

"என்னை அநியாயமாய் டெல்லி அரசன் சிறையில் வைத்திருந்தான். நான் சிறையினின்றும் தப்பிக்கொண்டு

ஓடிவந்தேன். வரும்வழியில் ராஜ்ய உத்யோகஸ்தனெ சண்டைபோட்டேன். பிறகு என் உயிரைச்சிறிதுணவின் பேரிற் காப்பாற்றிக்கொண்டு இவ்வளவு தூரம்வந்தேன். கம்பிலத்தார் ஒருவரும் இப்பொழுது என்னைக்கவனிக்க மாட்டார்கள் போல் இருந்தது. ஆகையாற்றான் ஆனெகுந் திக்கு வருகிறேன். வரும்வழியில் உங்களைக்கண்டேன். தாங்கள்யார்? உயர்பதவியிலிருப்போர் போற் காணப்படுகிறீர்களே! இன்றுமுதல் தங்கள் ஊழியனுவேன்; இது திண்ணம், திண்ணம்."

உடனே, ஹரிஹரன், நரசிங்கனைப்பார்த்து "இவனை நம்பலாமா? சொல்லு நீ" என்றான்.

"நம்பலாம்போல் இருக்கிறது மஹாராஜ்."

"சரி" என்று நரசிங்கனுக்கு விடைகொடுத்து விட்டு, ஷெயிக்கிடம்திரும்பி, "நீ டொக்லாக் ஒற்றனன்றே?" என்றான்.

உடனே ஷெயிக்கினது கண்கள் மிகச்சிவந்து கொந்தளித்தன; மீசைதுடித்தது; உடம்பு நடுங்கிற்று. பிறகு, "நானுபொய்சொல்லுவேன்?" என்றான்.

"ஷெயிக்! உன்னை நம்பினேன், இன்றுமுதல் எனது நரசிங்கனுடன் கூடவேயிரு" என்று அவனைக் குதிரையினின்றுமிறக்கி,தன்பக்கம்அழைத்துக்கொண்டான். உடனே மகம்மதும் கீழ்ப்பணிந்து, ஹரிஹரனை வணங்கினன். இரண்டு நாட்பயணத்தாலுண்டாகிய தேகவருத்தத்தால் மிகவும் வருந்தினன்.

பகற்பொழுது ஆய்விட்டது. சூரியன் மறைந்துவிட்டான். இன்னும் இரண்டுநாழிகைகளுக் கெல்லாம் இருள் வந்து நகரத்தைச்சூழ்ந்துவிடும். ஊரிலுள்ளோர்களெல்

லாம், ஹரிஹரன் போனவன் இன்னும் வரவில்லையே, வரவில்லையே என்று தவித்துக்கொண்டிருந்தார்கள்; ஒவ்வொருவரும் தமது இஷ்ட தேவதைக்குப் பூஜைசெய்யவேண்டுவதற்காகத் தேங்காய்பழம் பாக்குவெற்றிலை எல்லாவற்றையுங் கையிலேந்திக்கொண்டு கோயில்களுக்குக் கூட்டங்கூட்டமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். கோட்டைவாசலண்டை அநேகர்வந்து காத்துக்கொண்டிருந்தார்கள். ஹரிஹரன் வருமுன்னம், செய்திதெரிந்துகொள்ளவேண்டுமென்றுமிகுந்தஆசைகொண்டு, ஒவ்வொருவனும் தான் தானே ஹரிஹரனை முன்னே செய்தியை விசாரிப்பதாகச் சொன்னான். எல்லாருடைய வீட்டுவாசல்களிலும், சிறிய அகல்களில் விளக்கேற்றி வைக்கப்பட்டிருந்தன. வாசலிற் சிறிய பெண்கள், தங்கள் நாதனுக்குச் சண்டைக்குப்போகும்படியாய்நேரிடுமோவென நினைத்து, அந்நினைப்பால்நடுங்கி, மதிமயங்கிப்போய்ச் சித்திரப்பாவைபோல் நின்றுவிட்டார்கள். இச்சமயத்தில், ஹரிஹரன் வந்துவிட்டான் என்றசெய்தி பரவிற்று.

ஹரிஹரன் கோட்டைவாசலுக்கு வந்தபொழுது பெரியகூட்டம் அவனை நகரத்திற்குள் அழைக்கக்காத்துக்கொண்டிருந்தது. அவன் சமீபத்தில்வந்ததும் அவன் பின்னால் ஒருதுருக்கன் வருவதைப்பார்த்து எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

"ஒருவேளை நமக்குந்துருக்கனுக்குஞ் சிநேகம் ஆய்விட்டதோ?" என்றான் ஒருவன்.

"இல்லை, ஒருவேளை சண்டைச்செய்தி சொல்லவந்தாலும் வரலாம்" என்றான் மற்றொருவன்.

"என்னடா, ஹரிஹரனிடம் பணிகின்றானே."

"சும்மா பணியலாமே."

"என்ன! நீ என்னமோ சொல்லுகிருய்?"

"இல்லையடா, அவன்தானுகவே யோக்கியனுயிருக்கலாம். இவன் சேனுதிபதியானவனே; நாம் சும்மா வணக்கவொடுக்கத்துடன் இருக்கலாம் என நினைத்துப் பணிவுடன் நடந்துகொள்ளலாம்" என்றிவர்கள் இப்படிச்சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது,

"மஹராஜ் என்ன ஆயிற்று?" என்ருர்கள் எல்லோரும்.

"என்ன?" என்ருன் ஹரிஹரன்.

"போனீர்களே."

"ஆமாம் போனேன்."

"என்ன ஆயிற்று?"

"என்ன ஆவது? ஒன்றுஞ்சுகமில்லை."

எல்லாருஞ் சும்மாவிருந்தார்கள்.

"நாம் சண்டைபோடவேண்டுவது தான்" என்று மீண்டும் ஹரிஹரன் சொன்னுன். சொல்லிவிட்டு ஹரிஹரனும் மற்றிருவரும் நகரத்திற்குள்ளே நுழைந்தார்கள்.

ஜனங்களெல்லாம் ஒருவருக்கொருவர் பார்த்துப்பார்த்து, வாய்திறவாமல் நின்றுகொண்டிருந்தார்கள். உடனே எல்லாரும் வீட்டுக்குப்போய்ச் சமாசாரத்தைத் தெரியப்படுத்தவேண்டுமென்று சரசரவென்று தெருவழியே போய்க்கொண்டிருந்தார்கள். ஹரிஹரன் நேரே வீட்டுக்குப்போகவில்லை; நேராகவே அரண்மனைக்குப்போய்ச் சேர்ந்தான்; அரசன் அங்கேயில்லையென்று தெரிந்துகொண்டு, ஆலோசனைசபைக் கட்டிடத்துக்குப்போய்ச் சேர்ந்தான்; நரசிங்கனையும், ஷெயிக்மகம்மதையும் சாப்பாட்டுக்கு அனுப்பிவிட்டான்; அவர்களைச் சாப்பிட்டுவிட்டு உடனே தன் வீட்டுக்கு வரச்சொல்லியிருந்தான்.

ஆலோசனை சபைக்குட் போனவுடன், எல்லோரும் எழுந்தார்கள்: அரசன்மாத்திரம்சிங்காதனத்தில்உட்கார்ந்து கொண்டிருந்தான். ஹரிஹரன் வந்தவுடன்

"வாருமையா, ஹரிஹரரே" என்றான் அரசன்.

"இதோவந்தேன், மஹராஜ்" என்றான் ஹரிஹரன்.

"என்ன செய்தி?"

"ஒன்றும் நல்லசெய்தியில்லை."

"ஏன்?"

"டொக்லாக் நாம் எல்லோரும் அவனுக்கு அடிமையாய் இருக்கவேண்டுமென்று சொல்லுகிறான்"

"அப்படியா? நாம்சண்டைபோட வேண்டுவதுதானோ?"

"ஆமாம்."

"புக்கா, சேனையெல்லாஞ் சித்தமாயிருக்கிறதா?"

"சித்தமாயிருக்கிறது" என்றான்புக்கன்.

"சபையோர்களே! உங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டுவிட்டீர்கள்; நாம்கம்பிலநாட்டாரோடு சேர்ந்து போர் புரிய வேண்டுவதுதான்."

"சரிதான், அதற்குவேண்டிய பணம் இருக்கிறதா?" என்றார் ஒரு சபையார்.

"வேண்டிய அளவுஇருக்கிறது" என்றான் புக்கன்.

"அப்புறம், அரசன் ஹரிஹரனைத்தனியே அழைத்துப் போய் உம்மாலானமட்டும் போரை விலக்கப்பார்த்தீரோ?" என்றான்.

"நாம் சொல்லும்படியாகவே அவன் வைத்துக்கொள்ளவில்லை."

"என்ன தான்சொல்லி யனுப்புவித்தான்?"

"ஒன்று எனக்குக் கீழ்ப்படிந்திரு, அல்லது நீ சண்டைபோடு என்கிறான்."

"சரி, நாம் ஒன்று சொல்வதற்கில்லை."

"கம்பிலநாட்டார் என்னை உடனேபுறப்பட்டு வரச்சொன்னார்கள். நாம் நாளையே புறப்படவேண்டும்"

"ஆமாம்; எப்படி உசிதமோ அப்படிச்செய்."

"ஸைனியமெல்லாம் சித்தமாய்வைத்திருக்கிறான் நமது புக்கன், ஆகையால் நாளையேபுறப்படலாம்."

"விஜயே! ஒன்றுஞ் சரியாயில்லை" என்றான் ஹரிஹரன். ஹரிஹரன் காலையேபுறப்பட வேண்டியிருந்தபடியால், விஜயைக்கு முன்தான் வாக்களித்திருந்தபடி, அவளைவந்து பார்த்தான்.

"ஏன்?" என்றாள் விஜயை.

"போர்புரியவேண்டியதுதான்."

"வேறுஎவ்விதமும் ஏற்பாடுசெய்யமுடியவில்லையோ?"

"இல்லை."

"என்னசொல்லுகிறான்?"

"ஒன்றும் ஸ்வாரஸ்யமில்லை."

"ஆனாற்சரி."

"இந்த ஊரிலேயே தாங்கள் இருக்கலாமோ? அல்லது கம்பிலத்துக்குப் போகவேண்டுமோ?"

"அங்குத்தான் போகவேண்டும்."

"நானுங்கூட வரலாமோ?"

"உன்னை யழைத்துப்போவேன்; உன் தாய்தந்தையர்களுக்குத் தெரியாமல் உன்னையழைத்துப் போகலாகாது."

"என்தாயிடஞ் சொன்னேன்."

"என்ன சொன்னாள்?"

"அவளுக்குச் சம்மதந்தான்."

"உன் தந்தைக்கு?"

"என் தாய்சொல்லை அவர் தட்டுவதில்லை."

"ஆயினும் உன்னைப் போருக்கு அழைத்துப்போகலாகாது."

"போர்நடக்கும்பொழுது, உங்களைவிட்டுப் பிரிந்திருத்தல் அசாத்தியம். நான் தாங்களோடே கூடவருவேன்."

"விஜயை—"

"நாதா!"

"உனக்கு நான் செய்தி சொல்லியனுப்புவேன்."

"என்னசெய்தி?"

"என்னுடைய செய்தி."

"எங்கிருந்து?"

"எங்கே போர்நடக்கிறதோ அவ்விடமிருந்து தான்."

"தாங்கள் இரண்டு சைனியத்திற்கும் அதிபதியாய் இருக்கப்போகிறீர்களோ?"

"ஆமாம்."

"புக்கர் கூடவருவாரோ?"

"அவன்வராமல்?"

"இல்லை. எனக்குத்தெரியாது; அதனுற்றான் கேட்டேன்."

"அவனும் வருகிருன்."

"சரி."

"நான் போய்வரலாமா?"

"அதற்குள்ளா?"

"ஆமாம். காலையிற் புறப்படுவதற்குச் சித்தமாயிருக்கவேண்டாமோ? காலையிற் சைனியமுழுவதுடனும் நாங்கள் புறப்படவேண்டும்."

"நானுங்கூட வருகிறேனென்றால்—"

"நீ யுத்தகளத்தில் எங்கேவந்து நிற்பாய்?"

"தாங்கள் இருக்குமிடத்தில்."

"நீ என்னோடு இருக்கமுடியுமோ?"

"நான் இருக்கிறேன்."

"நீ பெண்பிள்ளையாவையே?"

"ஆனால் என்ன?"

"என்ன நீ பிதற்றுகிறாய்—"

"இல்லை; அப்படியே நடத்துவேன்."

"நான் சொல்வதைக்கேள். நீ இங்கேயே இரு. நான் ஒவ்வொருநாளும் உனக்குத் தூதனுப்புவேன்."

"நிச்சயமாய்த்தானா?"

"நிச்சயமாய்த்தான்."

"ஆயினும்—"

"பின்னும் பின்னும் அதையே சொல்லுகிறாயே."

"நாதா! கொடும்போரில் என்ன விளையுமோவென்று பயப்படுகிறேன். என்னுடைய அறியாமைக்காக என்னை யொன்றுஞ் சொல்லாதீர். தங்களிடம் எனக்கிருக்கிற நேசத்தால் எனக்குத் தங்களைவிட்டுப் பிரிவதற்கு மனம் பொறுக்கவில்லை. கடைசியாய்த் தாங்கள் சொல்வதை யான்கேட்பதற்குத் தடையேயில்லை. என்ன சொல்லுகிறீர்?"

"நீ இங்கேயே இருந்துவிடு."

"இருந்துவிடுவேன். மேல்"

"நான் உனக்கு ஒவ்வொருநாளும் ஆளனுப்புவேன்."

"தவறாமலா?"

"தவறாமலே"

"நேரமாய்விட்டது."

"போய்வாருங்கள்."

"போய்வருகிறேன். விஜயை" என்று சொல்லி முத்தமிட்டுச் சென்றான்.

## அத்தியாயம். 4.

### ஆனைகுந்திநாட்டழிவு.

"மாலிக்நாயப்! இன்னும் எவ்வளவு நாழிகை வழித்தூரம் நாம் நடக்கவேண்டும்?" என்றான் டொக்லாக்.

"ஐம்பதுமைல், மஹாராஜ்."

"இதோ ஓர் ஊர் தெரிகிறதே."

"ஆமாம்."

"அதன் பெயர் என்ன?"

"தலைக்கோட்டை."

"போகும்வழியில் நதிகள் மலைகள் உண்டா?"

"கிருஷ்ண நதியொன்றிருக்கிறது."

"மலை?"

"கம்பில நாட்டண்டை தான்."

"இன்றைக்கு இங்கேயே தங்குவோமா?"

"தங்கவேண்டுமென்று தங்களிடஞ் சொல்வதாகவிருந்தேன். தாங்களே அதைச் சொல்லிவிட்டீர்கள்."

"அப்படியே பேரிகையை யடிக்கச்சொல்லு."

"நான்சொல்லிவிடுகிறேன். மஹாராஜ்" என்று சொல்லிவிட்டு மாலிக்நாயப், அப்படியே பேரிகையை யடிப்பித்தான். பேரிகையோதைகேட்டதும் எல்லாரும் நடுநடுங்கிக்கொண்டு, என்னவந்து நேரிடுமோவென்று பயந்துகொண்டிருந்தார்கள். ஆனால், அங்கேயே தங்குவதற்குப் பேரிகை யடிக்கப்பட்டதென்று கேள்வியுற்ற எல்லோரும், மிகச்சந்தோஷத்தை யடைந்தார்கள். எல்லாருங் கூடாரத்தையடி

த்துக்கொண்டு, தலைக்கோட்டை நகரத்திற்கு வெளியே தங்கினார்கள். டொக்லாக்படை போகிற வழியெல்லாம் நாசந்தான். ஊரூராய்க் கொளுத்துவதும், வீடுவீடாய்க் கொள்ளையடிப்பதும் தாம் அவர்களுக்கு வேலை. மாலிக் நாயபுக்கு இவ்விதமாய் அக்கிரமங்கள் செய்வதற்கு இஷ்டமேயில்லை. ஆனால் அரசனுக்கு அப்படி அக்கிரமஞ் செய்வதிற்சந்தோஷமிகுதியாயிருந்தது. ஆகையால், எல்லா அக்கிரமங்களும் ஒன்றுகூடத் தவறாமல் அவ்விடத்திலேயே நடந்தன. ஒருவனாவது, பிறனது மனையாளைக்கண்டால் அபகரியாமல் விருப்பதில்லை. நல்ல வம்சஸ்தர்களாகிய ஸ்திரீகள் இவர்கள் வருவதைக்கேட்டாற் றீயில்விழுந்து தங்களை யெரித்துக்கொள்ளுவார்கள். மாடுகளையெல்லாங் கொட்டத்தினின்றும் டொக்லாக்கது படையாட்கள் அவிழ்த்தோட்டிவிடுவார்கள், தான்யங்கள் சேர்த்துவைத்திருந்தால் அதில் நெருப்புவைத்து அதை எரித்துவிடுவார்கள். இன்னும் எடுத்துரைக்கமுடியாத பற்பல அநியாயங்களைச் செய்துகொண்டே, கம்பிலத்தண்டை படை முழுவதும் வந்துசேர்ந்தது.

"நண்பரே! நானும் யுத்தத்தைப் பார்க்கலாம் என்று வந்தேன்"! என்று கம்பிலத்தரசனண்டை ஆனைகுந்திநாட்டரசன் சொன்னான். இவ்விருவரும் அரண்மனைக்குள் இருந்தார்கள்.

"நமதுஹரிஹரர் வெற்றியடைவாரென்றுநம்புகிறேன்" என்றான் கம்பிலத்தரசன்.

"நீர் சொல்வது நிஜந்தான்."

"ஹரிஹரர் மிகவுஞ்சமர்த்தரென்று, அடிக்கடி யெனது நாட்டுவணிகர்களிடமாகவும், வேறு பலவழிகளாலுங் கேள்

வியுற்றிருக்கிறேன்: ஆயினும், தெய்வசம்மதம் எப்படியிருக்கிறதோ?"

"அதை நாம் எப்படிச்சொல்லலாம்?"

"டொக்லாக்சேனையை யார் நடாத்துகிறார்கள்?"

"யாரோ மாலிக்நாயபாம்."

"மாலிக்நாயபா? சமர்த்தன்தானோ?"

"அப்படித்தான் சொல்லுகிறார்கள்"

"நண்பரே! சப்தம் பலமாய்க் கேட்கின்றது; யுத்தம் ஆரம்பித்துவிட்டாற்போ லிருக்கிறது."

"ஆமாம்; ஆமாம்."

"எப்படி முடியுமோ?"

"கிருஷ்ணா! கிருஷ்ணா! நாராயணா!"

"மகாதேவ! பசுபதே! அர்த்தநாரீசுவரா!"

"எவ்வளவு நாளைக்கு இந்தயுத்தம் நடக்குமோ? தெரியவில்லை."

"சீக்கிரம் முடிந்துவிடும்போல் இருக்கிறது."

"ஏன்?"

"டொக்லாக் வெகுநாள் நம்மூரில் இருக்கமாட்டான். அவன் டெல்லியை விட்டுப்புறப்பட்டு வெகுநாட்களாயின. ஆகையாற் சிலநாட்களே இவ்விடம் தங்கியிருப்பான்."

"இல்லை, அப்படிச் சொல்லக்கூடாது"

"இல்லை, இல்லை, நான் நிச்சயமாகச் சொல்லுவேன்."

"அப்படியானால் நலந்தானே."

"நமது ஹரிஹரர் சண்டையை வெகுநாள்வரைக்கும் வளரும்படி செய்வார்."

"டொக்லாக், இவ்விடம் அதிகநாள் தங்கியிருக்கமுடியாமல் நம்மைவிட்டுப் போய்விடுவான்."

"தெய்வமே! அப்படியே முடியலாகாதா.?"

"நானும் அதைத்தானே கோருகிறேன்."

இப்படி இவ்விரண்டரசர்களும் பேசிக்கொண்டிருந்த பொழுது யுத்தகளத்திற் பின்வருமாறு நடந்துகொண்டிருந்தது. டொக்லாக் ஐந்து மைல் தூரத்திலிருந்தபொழுதே, ஹரிஹரன் கோட்டைக்கடுத்த ஒருசிறு மலையின்பேரில் தனதுசைனிய முழுவதையும் அடுக்கிவைத்திருந்தான். சேனைகளை நிறுத்திவைத்த மறுநாளேயுத்தம் ஆரம்பித்துவிட்டது; காலையிற் சிறிது வெளிச்சம் இருக்கும்பொழுதே இருதிறத்தாரும் சண்டையிட ஆரம்பித்தார்கள். பதினைந்து நாழிகைவரைக்கும் இருதிறத்தாரும் ஒருவருக்கொருவர் சளையாமற் போர்புரிந்து கொண்டிருந்தார்கள். பதினைந்து நாழிகையானவுடன் மாலிக்நாயப் நேரே ஹரிஹரனோடு யுத்தஞ்செய்யவேண்டுமென்ற வெண்ணத்துடன்வந்தான்.

"ஹரிஹரா!" என்று மாலிக்நாயப் கூப்பிட்டான்.

"என்னையார் கூப்பிடுவது?" என்றான் ஹரிஹரன்.

"நீ வீரனா?"

"நீ யார் என்னைக்கேட்பதற்கு?"

"நான் கேட்பேன்; என்னோடு மல்லயுத்தஞ் செய்வாயா?"

"உன்னோடுமாத்திரமா? உன் பாட்டனோடுஞ் செய்வேன்."

"என் பாட்டனோடா?"

"ஆமாம்."

"வா நீ" என்றுசொல்லிக்கொண்டு, மாலிக்நாயப் வரனைவீசிக்கொண்டு, இருவரும் குதிரைமேலிருக்க ஹரிஹர

னைத் தாக்கினன். ஹரிஹரன் அதைத் தனது வாளால் வெகு இலகுவாய்த் தடுத்துவிட்டான். அவன் அப்படித்தடுத்ததும் மாலிக்நாயபுக்கு மிகவும் கோபம்வந்தது. உடனே மாலிக் நாயப், தனது வாளைச்சுழற்றிக்கொண்டு, எல்லாப்பக்கத் திலுந் தாக்கினன். ஆனல் ஹரிஹரன் அதைச் சிறிதும் லக்ஷி யஞ்செய்தானல்லன். மாலிக்நாயபுக்கு மிகுந்த மனக்கலக்க மாய்விட்டது. இவர்களுக்கு இருபுறத்திலும், இருபக்கத் தாரும் ஒருவருக்கொருவர் சண்டைபோடாமல் நிச்சப்த ராய் நின்றுகொண்டு இதன்முடிவை, ஆழ்ந்த கவலையுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். சரேலென மாலிக்நா யபினது தலைப்பாகை கீழே விழுந்துருண்டது. அது கீழே விழுந்தவுடன், ஆக்கிரகாவேசத்துடன், ஹரிஹரனைத் தாக் கினன். ஹரிஹரன் மாலிக்நாயபினதுவாளைக் கையினின்றும் ஓடிப்போய்த் தூரத்தில் விழும்படி வெகுபலமாய் அடித் தான்; வாள் கீழேவிழுந்ததும் மாலிக்நாயபுங் கீழேகுதித் தான்; ஹரிஹரனும் பின்தொடர்ந்து,மாலிக்நாயபைக் கையா ற்பற்றிக் கீழே தள்ளினன். அதற்குள்ளே, ஆலிமகம்மது ஓடிவந்து, மாலிக்நாயபைப் பிடித்திழுத்துக்கொண்டு, ஹரி ஹரனிடமிருந்து தப்புவித்தான். ஹரிஹரன் திரும்பி மாலிக் நாயப் ஓடுவதைபபார்த்து,

"நாசிங்கா! பெரும்பிழை செய்தேன்" என்றான்.

"என்னமகராஜ்?" என்றான் நரசிங்கன்.

"அவனை வீரனென்று நினைத்தேனடா."

"நானும் அப்படித்தான் நினைத்தேன்."

"இப்படி ஓடுவானென்று முன்னமே அறிந்திருந்தே னகில் நான் அவனேடு போர் புரிந்திருக்கவே மாட்டேன்."

"போனதுபோகட்டும்."

"சரி, நாம் யுத்தத்தைப் பார்ப்போம்."

இவர்கள் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்குஞ் சமயத்தில், சைனியத்தின் மற்றொருபக்கத்திலுள்ளோர்கள் யுத்தஞ் சிறிதுநேரம் அதிகத் தளர்ச்சியடைந்திருந்ததைக்கண்டு; தாங்கள் தோற்றுவிட்டதாக நினைத்துவிட்டார்கள்; அவ்விதம் நினைந்து இன்னது செய்வதென்று தெரிந்துகொள்ளாமல் திகைத்து நின்றுகொண்டிருக்கையில், யாரோ ஒரு பாதகன் ஓடிவந்து 'ஹரிஹரன் இறந்தான்' என்று, ஒரு கூக்குரலிட்டான். இவ்விதங் கூக்குரலிட்டவுடன் அந்தப் பக்கத்திலிருந்த சைனியமுழுவதும், மலையினின்றும் கீழே ஓட ஆரம்பித்தது; ஹரிஹரன் தனது சேனையின்பகுதி ஓடுவதைப்பார்த்தான். அண்டையிலிருந்த கம்பிலத்தான் ஒருவனைநோக்கி,

"ஏன் ஓடுகிறார்கள்?" என்றான்.

"ஹரிஹரர் இறந்துவிட்டாராமே" என்றான் அவன்.

"யார் சொன்னார்கள்?"

"அதனாற்றான் ஓடுகிறார்கள்."

"ஓடு! ஓடு! நான்தான் ஹரிஹரன்; பிழைத்திருக்கிறேன்."

"நீயா! நீயா!" என்று அவன் ஓடி,

"ஏய்! ஏய்! ஓடாதே! நில்லு! நில்லு!" என்று அவன் கதறினான். இவன் என்ன கதறியும், இவன் வார்த்தையை லக்ஷியம் பண்ணுகிறவர்கள் ஒருவருமில்லை; எல்லோரும் ஓடிக்கொண்டே இருந்தார்கள். இவர்கள் கொஞ்சத்தூரம் போவதற்கு முன்னமே, மாலிக்நாயப் தனது சைனியத்தின் ஒருபாகத்தை வெகுவேகமாய்க் கொண்டுவந்து, ஹரிஹரன் நின்ற இடத்திலிருந்த சேனைக்கும், ஓடிப்போன சேனைக்கும் நடுவிற் கொண்டுவந்து நிறுத்திவிட்டான். ஓடின

வர்களுள் அநேகர்தப்பி ஊர்ப்பக்கம் ஓடிப்போய்விட்டார்கள்; ஆனால் அநேகர் துருக்கன் வாளுக்கு இரையாயினார்கள். இனிமேற் கண்டிப்பாய்த் தோற்றுப்போய்விடுவோமென்று ஹரிஹரன் மனந்தளர்ந்தான்; மகம்மது சைனியத்தின் ஒருபாகம் ஹரிஹரன் இருந்தபக்கத்திற்கு விரைந்துவந்தது. உடனே ஹரிஹரன்,

"நண்பர்காள்! மனந்தளராதீர்!" என்று கதறினான்.

"இல்லை; உயிர்உள்ளவரைக்கும் போர்புரிவோம்" என்றார்கள் படையிலுள்ள எல்லோரும்.

"சபாஷ். நாராயணா, நீயேகதி" என்று சொல்லுமுன்னம் துருக்கன்சேனை இவர்களைத்தாக்கிற்று.

"புக்கா! என்பின்னே நில்லு" என்றான் ஹரிஹரன்.

"வந்தேன் அண்ணா!" என்றான் புக்கன்.

"என்னவிதியடாநமது?"

"அண்ணா! என்னவென்றுசொல்லுவேன்?"

"மனந்தளராதை."

"இல்லை, இல்லை."

"நரசிங்கன்எங்கே?"

"இதோமகராஜ்" என்றான் நரசிங்கன்.

"இதோ தங்களை நான் உயிர்துறக்கும் வரையிற் காப்பேன்" என்றான் ஷெயிக் மகம்மதும்.

"மகம்மது! மிகவுங் களிப்புற்றேன்?" என்றான் ஹரிஹரன்,

"மஹாராஜா! தாங்கள்தான் எனக்குக்குரு" என்றான் மகம்மது.

இவர்கள் இப்படிப்பேசி முடியுமுன்னம், டொக்லாக்படைவீரர்களுட் சிலர், வழியிலுள்ள ஹிந்துவீரர்கள் எல்

லோரையும் வெருட்டிக்கொண்டு, ஹரிஹரனண்டை வந்தார்கள். ஹரிஹரனும் மற்றுமூவரும் வெகுசாமார்த்தியமாய்த் தங்களைக் காத்துக்கொண்டார்கள். மறுபடியுந் துருக்கன் ஒருவன் ஹரிஹரன் இறந்தானென்னப் பொய்யாய்க் கூக்குரலிட்டான். இப்பொழுதும் இரண்டு விநாடிகளுக்கு, ஹிந்துசைனியங்கள் சும்மாவிருந்தன; மகம்மது சைனியமும் வெற்றியடைந்தது.

ஹிந்துசைனியமுழுவதுஞ் சின்னபின்னமாகிச் சிதறிப்போய், நாலாபக்கங்களிலு மோடிற்று. ஹரிஹரனும் அவனுடனிருந்த மூவரும், ஒருவரையொருவர் அறியாமல் எங்கெங்கேயோ ஓடினார்கள். ஹரிஹரன்தன் உடையைக்கழற்றிவிட்டு, ஓர் இறந்தவீரனுடைய உடையை மேலேபோட்டுக்கொண்டு ஓடிவிட்டான். இவன் எவ்விடம்போனானென்று தெரியவில்லை. கம்பிலத்தண்டையாவது, ஆனைகுந்தியண்டையாவது போவதற்குச் சரிப்படாது. ஆகையால் வடக்கேயாவது கிழக்கேயாவதுதான் ஓடவேண்டும். ஆகையால் ஹரிஹரன் வாரங்கல் பக்கம் ஓடிவிட்டான். அவன் இரவும் பகலும் இடைவிடாமல் ஓடிக்கொண்டேயிருந்தான்.

இவர்கள்கதி இவ்வாறுயிருக்கையில், டொக்லாக்சேனை என்ன செய்ததென்று பார்ப்போம். கம்பிலத்துக்கோட்
டையில் அதைப்பாதுகாப்பதற்கு ஒருவரு மில்லை
யால், டொக்லாக்சேனையின் ஒருபகுதி, கோட்டைச்
குந்து, கோட்டைமதில்களையெல்லாம் இடிக்க
த்தது. இக்கதிவருமென்று ஒருநாளும் அவர்க டாம்."
க்கவேயில்லை. கண்டிப்பாய்த் தங்களுக்கு வெ
துவிடுமென்றே நினைத்திருந்தார்கள். இவர் திற் பயனில்
ழைந்ததும் எல்லாரும் கதிகலங்கிப்போ ருவைப் பார்த்தால்

எவ்விடம்போவதென்று அறியாமல், இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். சைனியம்கோட்டைமதிலை இடிக்கத்தொடங்கியதும் இவர்களுக்குச் செய்வதொன்றுந் தோற்றவேயில்லை. வெளியே ஓடுவோமென்றாலோ, போகிறதற்கு வழியில்லை; இவர்களை வாளாற் சேதித்துவிடுவார்களே! அரசர்களுக்கு இச்செய்தி எட்டிற்று; உடனே மூர்ச்சையற்று இருவரும் கீழேவிழுந்தார்கள்.

"யாரடாவெளியே?" என்றான் ஆனைகுந்திஅரசன்.

"மஹா ராஜ்" என்றான் ஒருவன்.

"மஹாராஜ என்னவேண்டியிருக்கிறது. ஹரிஹரன் எங்கே?"

"இறந்துபோய்விட்டாரென்று சொல்லுகிறார்கள்."

"அடடா!"

"கம்பிலத்துச் சைனியத்தாற் றான்வந்தகெடுதி யெல்லாம்."

"என்னசெய்யலாம்? தெய்வசம்மதம் அப்படியிருந்தது."

"ஆமாம், ஸ்வாமீ!"

"அதிருக்கட்டும், நாம் அழைத்துவந்த நமது மனையாட்டியரெல்லாம் என்னசெய்கிறார்கள்?"

பேன் "தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருக்கிறார்கள்."

"மஹாவமே! என்னகதி?"

ஹரன், ...ராஜ்! தீயைவளர்த்துக்கொண்டிருக்கிறார்கள்."

"மஹா... வேளைதுருக்கன் நாம் அடிமையாய் இருப்போமகம்மது. ...ம்மாவிடலாமே!"

இவர்கள் ...ல்லிப்பார்த்தேன், இவர்கள் அதற்குச் செ... டைவீரர்களுட் சில...ன் என்கிறார்கள்."

"தீயிற் குதித்தாய்விட்டதா?"

"இல்லை."

"என்மக்கள் எங்கே?"

"தங்கள் பெண்களும் தீயிற்குதிக்கப் போகிறார்களாம்."

"என்மக்கள் எங்கே!"

"யுவராஜாக்கள் அடுத்தமாளிகையிலிருக்கிறார்கள்."

"அவர்களைக் கூப்பிடு."

"அவர்கள் ஒளித்துக்கொண்டிருக்கிறார்களே!"

"இருந்தால் என்ன! கூப்பிடு."

"இல்லை, மஹாராஜ்."

"நீஇங்கேயேயிரு; என்மக்களைத் தீயினின்றுவிடுவிப்பேன், போய்வருகிறேன்."

"மஹாராஜா போகாதீர்கள், துருக்கர்தங்களைச் சிரச்சேதம் செய்துவிடுவார்கள்."

"பேசாதே!"

"போகாதீர்கள்" என்று சொல்லிக்கொண்டு, அவன் அரசன் வழியிற் குறுக்கேநின்றுகொண்டான்.

"அப்பா, என்னசெய்யச்சொல்லுகிறாய்?" ...ன்.

"இந்தமூலையில் ஒளித்துக்கொள்ளுங்கள்."

"எப்படியும் என்னைப்பிடித்துவிடுவானே!"

"நான்வழியில் நின்றுகொண்டுயார்வரினும் ...டுகிறேன்."

"சப்தம்கேட்கிறது; ஒளித்துக்கொள்ளமாட்டோம்."

இதற்குள் மிகபலத்த ஒரு சப்தம்...

துருக்கர், வாள், கத்தி, முதலியிருப்பதிற் பயனில் கையிலெடுத்துக்கொண்டு, "எங்கே ... உருவைப்பார்த்தால்

என்று கத்திக்கொண்டு மிகப்பரபரப்பாய் ஓடிவந்தார்கள். வரும்வழியில் ஒவ்வோர் இடத்திலும், அரசன் ஒளித்துக்கொண்டிருக்கிருனேவென்று தேடிப்பார்த்தார்கள். எவ்விடத்திலும் அகப்படாததனுல் அரசன் ஒளித்துக்கொண்டிருக்குங் கதவண்டை வந்தார்கள். கதவண்டை முன்னுஞ்சொன்னபடியே, ஒருவன் வாளையுருவிக்கொண்டு நின்றுகொண்டிருந்தான். இவர்கள் வந்ததும் வாளைவீசினுன்; உடனே சற்றுப் பின்தங்கினுர்கள். அவர்களுள் ஒருவன்,

"அடா! புத்திஹீனு!" என்முன்.

"யாரடா புத்திஹீனன்? நீயோ? நானே?" என்முன் வேலைக்காரன்.

"நீதானடா."

"சும்மாபதருதே. கொன்றுவிடுவேன்."

"நாங்கள் எவ்வளவு பெயர்கள் பார்த்தாயா?"

"பார்த்தால் என்ன?"

"சிறிதேனும் புத்தியிருக்குமாயில், இக்காரியம் செய்யமாட்டாய்."

"உங்களையெல்லாம், ஒரேவீச்சிற் கொன்றுவிடுவேன்."

"உன் வீரத்தைப்பார்ப்போம்."

டியடின்று அவன் காவற்காரன்மேற் பாய்ந்தான். அவன்
பேன் "தேர்ந்தபொழுது, இவன் வாளை அவனது ஹிருதயத்
"மபாவ நீட்டிக்கொண் டிருந்தபடியால், ஹிருதயத்து
ஹரன், ராஜ நதும், அவன் திடீரெனக்கீழேவிழுந்து விட்
"மஹா வேளைகீழ விழுந்ததைப்பார்த்து எல்லோரும்
மகம்மது. ம்மாவிவிட்டார்கள். உடனே இருவர்ஓடிவந்து,
இவர்கள் ூல்லிப்பைதத்தூக்கிக்கொண்டு, அவ்விடத்தை
டைவீரர்களுட் சில்ன் சய்தி துருக்கன் சைனியமுழுவதும்

வெகுசீக்கிரம் பரவிற்று. எப்படியாவது அவ்வொருவனை க்கொன்றுவிடவேண்டுமென்று எல்லோரும் ஓடிவந்தார்கள். ஒவ்வொருவராக அவனோடு போர்செய்யப் பார்த்தார்கள்; ஒருவனுய்ச் சண்டைபோட்டால் அவனை ஒருபொழுதும் வெல்லமுடியாதுபோலிருந்தது. உடனே எல்லோருமாக ஒருங்கே அவன்மேற் பாய்ந்தார்கள். அவ்வீரனும் எல்லோருடனும் ஒருங்கே போர்செய்ய முடியாததனாற் கீழே விழுந்திருந்தான்.

உள்ளே துருக்கர்கள் நுழைந்ததும்,

“விடாதே, எல்லா மூலைகளிலுந்தேடு” என்றார்கள்.

எங்கேயுந்தேடிவிட்டுக் கதவண்டைவந்தபொழுது

“யாரோ நிற்கிறான்பார்” என்றான் ஒருவன்,

“பிடித்துக்கொண்டுவா” என்றான் மற்றொருவன்.

உடனே, எல்லோருமாக அரசன்மேற் போய்விழுந்தார்கள்; அரசனுக்கு அவர்களை யெதிர்ப்பதிற் பயனில்லை யெனத்தோன்றியதனாற் சும்மாவிருந்துவிட்டான். அப்பொழுது அரசனைப்பிடித்தவன், அரசனைநோக்கி

“நீயாரடா?” வென்றான்.

அரசன் பதிற்சொல்லமுடியாமல் திகைத்துநின்றான்.

“பதிற்சொல்லு” என்றான் மீண்டும்.

ஒன்றும் பதிலில்லை.

“நீ ஆனைகுந்தி அரசனோ?”

பதிலில்லை.

“நாங்கள் உன்னையொன்றுஞ் செய்யமாட்டோம்.”

உத்தரம் ஒன்றுமில்லை.

இவனை இங்கே நிறுத்திக் கொண்டிருப்பதிற் பயனில்லையென்று உத்தேசித்து, அவன் உருவைப்பார்த்தால்

அவன் அரசனெனத்தோற்றியதனுல், அவனை இவர்கள் டொக்லாக்கண்டை அழைத்துப்போனுர்கள்.

டொக்லாக் இவர்கள் வருவதைப்பார்த்து,

"யாரையடா அழைத்துவருகிறீர்கள்?" என்ருன்.

"இவன்தான் ஆனைகுந்தி அரசன்" என்ருர்கள்.

"நீர்தாமோ ஆனைகுந்திராஜ்?" என்று டொக்லாக் அரசனைநோக்கிக் கேட்டான்.

"ஆமாம்" என்று அரசன் தலையையசைத்தான்.

"உமது ஆயுள் முழுவதும் எனது சிறையிலன்ருே அடைபட்டிருக்கவேண்டும். ஏன்தப்பிதஞ்செய்தீர்?"

"என்னதப்பிதம்?"

"நீர் ஏன் வீணுய்ப் போர்புரிந்தீர்?"

"அது தப்பிதமோ!"

"ஓய் புத்தியீனராயிருக்கின்றீர்; செய்ததுபிழை! அதை யுஞ் செய்துவிட்டு, என்னையுமா எதிர்த்துப்பேசுகிறீர்?"

"என்ன! அரசன்போல் நீர்நடந்துகொள்ளவில்லையே?"

இவன் இப்படிச்சொல்லியதும் சபையிலுள்ள எல்லோரும் நடுநடுங்கி மயிர்க்கூச்சலிட்டார்கள். எல்லோருக்கும் மனமும் அங்கமும் பதைத்தன. அரசனை ஒருவேளை இம்மூடன் வெட்டிவிடுவானேவென நடுங்கினுர்கள்.

"என்ன பிதற்றினீர்?" என்று டொக்லாக், கோபாவேசத்துடன் சொன்னுன்.

"பிதற்றுவதா?"

"பின்னையென்ன?"

"நான் அரசனு? நீ அரசனு?"

"தெய்வம் மூடனுக்கும் மூர்க்கனுக்குஞ் செல்வத்தைக் கொடுக்கவில்லையா?"

"நான் மூடனா?"

"உமக்கன்றோ அதுதெரியும்."

"மந்திரி! இவனை என்முன்நிறுத்தாதே. இவனைக்கொண்டுபோய்ச் சிரச்சேதம்பண்ணி, அவன் சிரசைக்கொண்டுவந்து தக்கணமே எனக்குக்காட்டவேண்டும்."

"மஹராஜ்—" என்று கெஞ்சியகுரலுடன் மந்திரிசொல்ல,

"மந்திரி!" என்று உரத்திக்கத்தினன்.

"மஹராஜ்! ஒருவிண்ணப்பம்" என்று சொல்லிக்கொண்டே, மந்திரி டொக்லாக் இருபாதத்தையும் பிடித்துக்கொண்டான்.

டொக்லாக்கோபம் கொஞ்சம் சாந்தமாயிற்று.

"என்ன? சொல்லும்" என்றான்.

"இவ்விதம், தீர்ப்புச்செய்வது தங்களுக்கு அழகன்று. அவரும் தங்களைப்போன்ற ஓர் அரசர்; ஏதோ தெய்வவசத் தாற்றோற்றுப்போய்விட்டார். நாம் அவரை நமது வேலைக்காரன்போல மதிக்கலாகாது. அவர் பேசும்வார்த்தைகளாலுங் கோபங்கொள்ளக்கூடாது" என்றார்மந்திரி.

"அப்படித்தான் செய்யவேண்டுமோ?"

"ஆமாம்."

"திரும்பவுஞ் சொல்லும்."

"நிதானிக்கவேண்டும்; இப்படித் தீர்ப்புச்செய்யலாகாது." மந்திரி இன்னும் டொக்லாக்கது காலைவிடவில்லை.

மந்திரியினது பேச்சைக்கேட்டதும் டொக்லாக் நடுநடுங்கிப் போய்விட்டான்.

"மந்திரி! நீ செப்பியபடி நடப்பேன்; என்காலைவிடு." என்றான்.

"மஹாராஜ, சித்தம்" என மனம்பூரித்து மந்திரியெழுந்தார்.

இதற்குட் காவலாளர்கள் ஆனைகுந்திஅரசன் மக்களையுங்கொண்டுவந்து, நவாப்முன்னே நிறுத்தினார்கள். அரசனுக்குப் பிள்ளைகள் பதினொருவர்; எல்லோரையும் தகப்பனுடன் வரிசையாய்க் காவலாளர்கள் நிறுத்தினதும், டொக்லாக்குக்கு அவர்கள்பேரில் இரக்கம்ஜனித்தது. அவர்களையெல்லாஞ் சிறையில்வைப்பதற்குச் சிறிதேனும் அவனுக்கு மனம் எழவேயில்லை; அவர்களை க்ஷத்திரியர்களாகவே வைத்திருப்பதற்கும் அவனுக்கு இஷ்டமில்லை; அவர்கள் மகம்மதியர்களாக ஆய்விட்டால், அவர்கள்நாட்டை அவர்களிடமே ஒப்பித்து அதையாளச் சொல்லலாமெனநினைத்து, மந்திரியிடம் தனியாய்த் தனது எண்ணத்தை வெளியிட்டான். மந்திரி சிறிது சம்மதமில்லாதவர்போற் காணப்பட்டார். டொக்லாக் உடனே "முதலில் உன் விண்ணப்பத்தையேற்றுக்கொண்டு, எனதாக்ஞையை மாற்றினேன். இனி நான் எண்ணியதைக் கைவிடேன்" என்றான்.

மந்திரியும் இனிமேல் எதிர்ப்பதிற் பயனில்லையென்றெண்ணி, "மஹாராஜ, தங்கள் சித்தம்" என்றார்.

"சபாஷ், மந்திரி!" என்று அரசன்சொல்லிவிட்டு, ஆனைகுந்திநகரத் தரசன்பக்கல் திரும்பி.

"ஐயா! நீர் நமக்குக் கைதியாய்விடினும், உம்மைத் தண்டிப்பதற்கு எனக்குச் சற்றும் இஷ்டமில்லை" என்றான்.

"அதற்காக யான் நிரம்பவும் வந்தனமளிக்கிறேன்" என்று ஆனைகுந்தி நாட்டரசன் மறுமொழி யளிக்க,

"வந்தனம் வேண்டாம், நான் சொல்வதைமட்டும்,ஒரு விஷயத்திற் கேட்கவேண்டும்."

"என்ன விஷயம்?"

"அவ்விஷயத்தில் நான் சொல்வதைக் கேட்பீராகில், உமக்கு இகலோகத்திலும், பரலோகத்திலுஞ் சுகமுண்டு."

"என்ன விஷயம்?"

"அதை நான் சொல்லுவேன் ஐயா!"

"சொன்னால், என்னால் முடியும் முடியாதென்று சொல்லுகிறேன்."

"நீர் எப்படியும் அதைச் செய்ய வேண்டுவதுதானே."

"என்ன!"

"என் கட்டளையை மீறி உம்மால் நடக்கமுடியாது."

"அதைச் செய்வதற்கு எனக்கு இஷ்டமில்லாவிடில், உமது கட்டளையைக் கண்டிப்பாய் மீறி நடப்பேன்."

"உமதுதலை உடனே அறுந்து கீழேவிழும்."

ஆணைகுந்தி அரசன் கல்லென நகைத்துவிட்டு "அவ்வளவுதானே! அதற்குமேல் உம்மால் ஏதாவது செய்யமுடியுமோ?" என்று வெகு அலக்ஷியமாய்க் கேட்டான்.

"தக்கணமே நீர் எமது மதக்கொள்கையை அநுசரிக்கவேண்டும். என்ன சொல்லுகிறீர்?"

"நான் நீர் சொல்வதைச் செய்யமாட்டேன்."

"நன்றாய் யோசித்துப்பேசும்."

"யோசித்துவிட்டேன்" என்று சொல்லிவிட்டுத், தனது மக்கள் எல்லோரையும் ஒருதடவை ஏற இறங்கப் பார்த்துப் பின்னும் "என்மக்களும் அப்புன்றொழில் செய்யமாட்டார்கள்" என்றான்.

"இப்பொழுதும் மன்னித்தேன்; இனியாவது உமதுயிரைக்காப்பாற்றிக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள்ளும். இப்பொழுது அரசன், டொக்லாக்கது மந்திரியை மிகக்கடு

நோக்குடன் விழியசையாமற் பார்த்தான். மந்திரி தன்னால் ஒன்றும் ஆகாது என்பதற்கு அறிகுறியாகத் தலையைக் கீழே தொங்கவிட்டான்."

"என்ன சொல்லுகிறீர்?" என்றான் மீண்டும் டொக்லாக்.

"என்னால் முடியாது."

"முடியாதா?"

"ஆமாம்."

"உனது வம்சம் நாளையே அழிந்துவிடும்.''

"துஷ்டா! என்னைப்பாராதே" என்று அரசன் மூர்ச்சையற்றுக் கீழேவிழுந்தான்.

---

## அத்தியாயம் 5.

---

### படுகொலை.

---

அரசன் இவ்வாறுசெப்பியதும், டொக்லாக் மிகவுங் கோபாவேசங்கொண்டு, இவர்களையெல்லாஞ்சிறையிற்கொண்டுபோய் அடைத்துவிடச்சொன்னான். மறுநாட்காலையில் எல்லோரும் ஆனைகுந்திக்கு வந்துசேர்ந்தார்கள்: பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லோருந், தங்கள் அரசன் தோல்வியடைந்தானென்பதைக் கேள்வியுற்று, ஊரைவிட்டோடிப் போய்விட்டார்கள். டொக்லாக்வந்தபொழுது, எல்லாவீட்டுக்கதவுகளுந் திறந்துவைக்கப்பட்டிருந்தன. எந்தவீட்டில் நுழைந்தாலும், யாரும் அங்கே காணப்படவில்லை. ஆனைகுந்திஅரசனை, அவன்நாட்டார்கண்முன்னே, உயிரோடுகொளுத்தவேண்டுமென்று டொக்லாக் நினைத்திருந்தது பூர்த்தியாகாமற் போனபடியால், மிகவுங் கோபங்கொண்டு உடனே

ஒரு பெரியகுழிவெட்டி அதில் தீயைவளர்க்கச்சொன்னான். சூரியன்உதித்துப் பத்துநாழிகையாயிற்று. அரண்மனைக் கடுத்த மைதானத்தில் ஒரு குழிவெட்டப்பட்டிருந்தது. அதில் ஆறு இருப்புக்கம்பங்கள் நிறுத்தப்பட்டிருந்தன. குழிமுழுவதிலும் வைக்கோல் கட்டுகெட்டாய் நிறைக்கப் பட்டிருந்திருந்தது. டொக்லாக் அக்குழிக்குப் பத்துகஜத் துக்கப்பாலிருந்த ஒருகட்டிடத்தில் ஒரு நாற்காலியில் உட் கார்ந்துகொண்டிருந்தான். முதலில் அரசனையும் அவன்மக் கள் ஐந்துபெயர்களையுங்கொண்டுவந்து குழியண்டைநிறுத் தினார்கள். டொக்லாக் இருந்தவிடத்திலிருந்து,

"அடா, நான்சொல்வதைக் கேட்டால், இந்நாடுமுழு வதும் ஆளலாம்; இல்லாவிடில், தீயில் இறக்கவேண்டும்" என்றான்.

"இல்லை, நாங்கள் இறக்கின்றோம்"என்றார்கள் எல் லோரும். பிறகு இவ்வாறுபெயர்களையும், அவ்வாறு இரும் புக்கம்பங்களிலுங் கொண்டுபோய்க்கட்டினார்கள். கட்டின வுடனும் டொக்லாக் 'மன்னிப்பேன்' எனச்சொல்லியும், அவர்கள், "ராம், ராம்"என்று ராமஸ்மரணைசெய்துகொண்டு காயத்தை மறந்தவர்களானார்கள். பிறகு, அக்குழியிலிருந்த வைக்கோலுக்குத் தீவைத்தார்கள். அப்பொழுதும், "மக ம்மதியர் ஆவீர்களா"வென்று கேட்டதற்கு "மாட்டோம்" என்று அவ்வாறுபெயர்களுஞ் சொல்லிவிட்டார்கள். தீயை யெடுத்து அவர்களாடைகளின்மேல் ஒருகோலாற் போட் டபின்னும், அவர்கள் சிறிதுஞ் சாவுக்கிரங்கவில்லை. டொக் லாக் இவர்கள் இவ்வளவு மூர்க்கராய் இருக்கிறார்கள், இவ ர்களைக்கொல்வதே நன்றென்றுகருதி, சிறிதுசிறிதாய் அவ ர்கள் தேகம்வதங்குவதையும், பிறகு தீப்பற்றி அங்கங்

கள் ஒவ்வொன்றாய் எறிவதையுங் கண்குளிரப்பார்த்தான். அவ்விருவருஞ் சாம்பலாய்க் கீழேவிழுந்தார்கள். பார்த் திருந்த மகம்மதியர்களே தாரைதாரையாகக் கண்ணீர்விட் டழுதார்கள். டொக்லாக்குக்குமாத்திரம், மனஞ் சிறிதே னும் இரங்கவில்லை. உடனே பிழைத்திருந்த மற்ற ஆறு கைதிகளையுங் கொண்டுவரச்சொன்னான்.

"என்ன சொல்லுகிறீர்கள்?" என்றான்.

"நாங்கள் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை"என்றார்கள்.

"மகம்மதியர் ஆவீர்களா?"

"மாட்டோம். சீ! துஷ்டா! ஒன்றும் பேசாதே" என் றார்கள்.

அவர்களையும் இவ்விதமே கொளுத்தச் சொல்லி விட் டுப் போய்விட்டான்.

சற்றுநேரம் ஆனவுடன் இருவர் டொக்லாக்கிடம் ஓடி வந்து,

"மஹராஜ் பிடித்துவிட்டோம்" என்றார்கள்.

"யாரை?"

"பகவுத்தீனை."

"எங்கே அவன்?"

மற்றிருவர் அப்பொழுது பகவுத்தீனைக் கொண்டு வந்து அரசன்முன் நிறுத்தினார்கள். பகவுத்தீனைப் பார்த் ததும் டொக்லாக்,

"பாதகா!" எனக்கூக்குரலிட்டான்.

"துஷ்டா!" என்றான் பகவுத்தீன்.

"என் ஆணைக்குமீறியா நடக்கப்பார்த்தாய்?"

"தெய்வம் தர்மமில்லாதவர்களுக்கன்றோ சகாயஞ்செ ய்கிறது. ஆனாலும் இப்பொழுது நீவெற்றி யடைந்திருந்தா

னும், நீ வெகு சீக்கிரத்திற் கெடுவாய், கெடுவாய்; உனது இராஜ்ஜியமும் வெகு சீக்கிரத்தில் அழிந்துவிடும்."

"என்ன சொன்னாய்?" என்று டொக்லாக் வாளையுருவினான். உடனே பகவுத்தீன் தன்னைப்பற்றிக்கொண் டிருந்தவர்களைத் திமிறிக்கொண்டு அரசன்மேற்பாய்ந்தான். அதற்குட் சபையிலிருந்த எல்லோரும், பகவுத்தீனை இழுத்துக் கொண்டுவந்து விட்டார்கள்.

"சிறிதுசிறிதாக உன்னைச்சித்திரவதைசெய்வேன்பார்."

"அதற்கு நான் சிறிதும் பயப்படவில்லை. உன்னிடம் அகப்பட்டுவிட்டேன். இனிஎனக்கு விமோசனமில்லை என்று எனக்குமுன்னமேதெரியுமே."

அந்தோ! இனிமேல் என்ன என்ன கொடுமைகள் நடந்தனவென்பதைச் சொல்லவும் வெகு கஷ்டமாயிருக்கிறது. அதைப்பற்றிக் கேட்கவும் மிகவெறுப்பாய் இருக்கிறது. டொக்லாக் மிகக்கொடியனென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். எவ்வளவோ கொடியஅரசர்கள் இருந்திருக்கிறார்கள்; ஆனால் இவனைப்போற் கொடியோன் ஒருவனுமிருந்ததில்லை. பகவுத்தீனைத் தனது உறவினர்களிடமெல்லாம் அழைத்துப்போகச்சொன்னான். தான்கூட நின்றுகொண்டு, அவர்களை இவன்மேற் காரித் துப்பச் சொன்னான். அவர்களெல்லோரும் இவனை மீறிநடக்கப் பயந்து பகவுத்தீன்பேரில் துப்பினார்கள். பிறகு தனது மனைவியர் மற்றைப் பெண்களிடமும் அழைத்துப்போகச் சொன்னான். அவர்களையும் இவன்மேற் காரித்துப்பச்சொன்னான். இவனை வாயில்வந்தபடி வையச்சொன்னான். ஊர்முழுவதும் அவனைக் கழுதைமேலேற்றி ஊர்கோலம் செய்விக்கச்சொன்னான். ஊரார் எல்லோரையும் அவனை இழிசொற்

ளால் அவமானப்படுத்த உத்தரவுகொடுத்தான். அவனை யார் எது செய்தாலும், அவர்களைத் தண்டிப்பதில்லையென்று பறையறையும்படி ஏவினன். பிரஜைகளோ பகவுத்தீன் மேல் இரக்கங்கொண்டு அவனையொன்றுஞ் செய்யவில்லை. ஊர்கோலமானவுடன் பகவுத்தீனை டொக்லாக்கிடம் கொண்டுவந்து நிறுத்தியபொழுது,

"அடா! இன்னும் பிழைத்திருக்கிறனு?" எனக்கேட்டான். பகவுத்தீன் வாய்திறக்கவில்லை.

"இருக்கிறன் மகராஜ்" என்றன் வேலைக்காரன்.

"இவன் மனைவியையும் மகனையும் அழைத்துவா"

"அவர்கள் எங்கே?"

"கம்பிலத்தில் இருக்கிறர்கள்."

"நாளைக்குத்தான் திரும்பிவர முடியும்."

"நாளைக்குவா, போ."

உடனே அவ்வேலைக்காரன் போய்விட்டான். மற்றொருவனை நோக்கி,

"யாரடா, நான் சொன்னபடி செய்" என்றன்.

"மஹாராஜ்! இவ்விடத்தில் அதைச் செய்யவேண்டாம்."

"என் முன்னிலையிலேயே, நீ அவனுடலின்மீந்தோலை உரிக்கவேணடும்."

இவ்வளவுநேரம் நின்றுகொண்டிருந்த பகவுத்தீன்,இப்பொழுது மூர்ச்சையற்றுக் கீழே விழுந்துவிட்டான்.

"ஐயா, மூச்சுவரவில்லை."

"சீ! துஷ்டா! நான் சொல்வதைச் செய்வாயா, மாட்டாயா?"

"ஆகட்டும், மஹராஜ்" என்று சொல்லிவிட்டு நீர்தளும் ...த்தளும்பப் பகவுத்தீன் மேற்றோலை எல்லோருமாக உரித்...ார்கள்.

"அடா, இவன்தோலிற்குள், வைக்கோலை யடைத்து வை" என்றான்.

"அப்படியே மஹாராஜ்" என்றார்கள்.

"இவன்தசையை, அரிசியுடன்கூடப்போட்டு சமையற் பண்ணச்சொல்லு; அதிற்கொஞ்சம் அவன் மனைவியையும் மகனையுஞ்சாப்பிடச்சொல்லு; பாக்கியை, நமதுயானைகளுக் குப்போட்டுவிடு."

"அப்படியே, நாங்கள் அவன்மனைவிக்குக் கொண்டு போய் இதைக்கொடுத்துவிட்டுவருகிறோமே?"

"அவர்களைக் கண்டிப்பாய்ச் சாப்பிடச்சொல்லமுடியு மா?"

"முடியும்."

"ஆனால் இப்பொழுதே ஓடுங்கள்" என்றுசொல்லிவிட் டுப்போய் விட்டான்.

அவன்போனதும் அவ்விடத்திலிருந்த வேலைக்காரர்க ள்பேசிக்கொண்டிருந்தார்கள்.

"நான்போய் அவ்விருவரையும் சாவதானமாய் ஓரிடத் தில் இருத்திவைக்கவேண்டும்" என்றான் ஒருவன்.

"ஆமாம் இங்குஅவர்கள்வந்துவிட்டால், இப்பாதகன் இத்தசையைக் கண்டிதமாய்ச் சாப்பிடச்சொல்லுவான்; அ வள்மாட்டேனென்பாள். அவளையுங்கொன்றுவிடு என்பான்" என்றான் மற்றொருவன்.

"இதை எப்படியும் சமைத்துக்காட்டவேண்டுமே?"

"ஆமாம்; காட்டிவிட்டுத்தான் நாம் ஓடவேண்டும்."

"அப்பா நீஇதைச்சமைத்துவருவாய்" என்று அங்கிரு ந்தவர்களுளொருவனைக் கூப்பிட்டுச் சொல்லிவிட்டு, மீண்டு ம் இவன்

"என்ன அநியாயம் பார்த்தாயா?" என்றான்.

"பார்த்து என்னசெய்யலாம்?"

"நம்மால் இதைத்தடுக்க முடியாமற் சிவித்திருக்கிறோமே!"

"ஆமாம், நாம் என்னசெய்யமுடியும்?"

"அவனைக் கொன்றுவிட்டாலென்ன?"

"நம்மையுங் கொன்றுவிடுவார்களே!"

"நாம்இறந்தாற் பாதகமில்லை; இத்துஷ்டனை நிக்கிரஞ் செய்வதே பெரும்புண்ணியமன்று?"

"ஆமாம்—"

"மேலென்ன?"

"நாம் அதைச்செய்வானேன்?"

"இப்படி ஒவ்வொருவருஞ் சொன்னால்!"

"ஆனால் உன்னிஷ்டப்படிசெய்."

"உன்உதவியில்லாமலா?"

"நான் இயன்றமட்டும் உனக்குஉதவிபுரிகிறேன்"

"நல்லதுதோழா!"

"அப்பா! அதோ அவன் சமைத்துக்கொண்டு வந்துவிட்டானே: புறப்படு நாம் போவோம்."

"சரி புறப்படு."

உடனே இருவரும் குதிரைமேல் ஏறிக்கொண்டு கம்பிலத்துக்குப் போய்விட்டார்கள். சமைத்துக் கொண்டு வந்தவன் அரசன் உத்தரவுப்படிக்கு, இவர்களிடம் ஒருபாகத்தைக் கொடுத்துவிட்டு, மற்றொருபாகத்தை யானையிடங் கொண்டுபோய் வைத்தார்கள். யானை அதை மோந்து பார்த்துவிட்டு, அதைச் சாப்பிடாமலிருந்துவிட்டது.

இன்னும், என்ன என்ன அநியாயங்கள் நடந்தனவென்பதைப்பற்றி எடுத்துரைக்கவேண்டியது அனுவசியம். வந்தவர்கள் சும்மாவிராமல் ஆனைகுந்தி நாட்டிலுள்ள எல்லாக் கட்டிடங்களையும் தரைமட்டும் இடித்துவிட ஆரம்பித்தார்கள். நல்லவேளையாய் ஊரிலுள்ள பிரஜைகளெல்லாம், வெவ்வேறு நாடுகளிற்குப்போய்க் குடியேறிவிட்டார்கள். இல்லாவிடில் இன்னும் எவ்வளவோ அக்கிரமங்கள் நடந்திருக்கும். அந்நாட்டு அரசன்வம்சத்தில் ஒருவரும் பிழைக்கவில்லை. ஸ்திரீகளெல்லாம் தீவளர்த்துத் துருக்கன் ஹிம்ஸைக்குப்பயந்து தீயிற்குதித்துவிட்டார்கள். அரசனும், அவன் பிள்ளைகளும், நாம் விவரித்துக்கூறியபடி இறந்தார்கள். இவர்கள் இருந்த அரண்மனை முழுவதையும் பொடியாக்கி, ஊரிலுள்ள கோயில்களிலுள்ள திரவியங்களையெல்லாம் வாரிக்கொண்டு, அதிலுள்ள விக்கிரகங்கள், கற்சிலைகள் முதலியவைகளையெல்லாம் பின்னப்படுத்தி, ஊர்முழுதும் சுடுகாடாக்கி விட்டபிறகுதான், டெல்லிக்குத் திரும்பிப்போனான். எவ்விதத்தினாலோ கம்பிலம்மாத்திரம் இக்கதி யடையவில்லை. டொக்லாக்குக்கு ஆனைகுந்திநாட்டார் ஊரைவிட்டுப் போய்விட்டபடியால் கோபம்மிகுந்து ஊர்முழுவதையுஞ் சாம்பலாக அடித்துவிட உத்தரவுகொடுத்துவிட்டான். ஆனாற் கம்பிலத்தை யிடித்துத்தொலையாமல், தனது ஆளுகையிலுள்ள ஓர் ஊராக வைத்துக்கொண்டான். ஆனால், கம்பிலத்திலுள்ளோர் துன்பமடையவில்லையென்று நாம் கொள்ளலாகாது. துருக்கன் இருந்தநாளெல்லாம், மிகுந்த வருத்தத்தை யடைந்தார்கள். அவர்கள் உடைமையெல்லாங் கொள்ளையடிக்கப்பட்டன; அவர்கள மாடுகன்றுகளையெல்லாம், துருக்கர்கள் கொன்று தின்றுவிட்டார்கள்; அ-

ர்கள் வீடுகளிலெல்லாம் துருக்கர்களெல்லாங் குடியேறிக் கொண்டார்கள்.

"மந்திரி, என்னசெய்யலாம்?" என்றான் டொக்லாக்.

"ஊருக்குத்தான் திரும்பிப்போகவேண்டும்" என்றார் மந்திரி.

"இவ்வூர்களை யென்னசெய்யலாம்?"

"நாம்தாம் வைத்துக்கொள்ளவேண்டும்."

"எப்படி?"

"தங்களுக்குப் பிரதிநிதியொருவரை யேற்படுத்தவேண்டும்."

"இவ்வூரைத்தான் அழித்துவிட்டோமே?"

"இல்லை"

"என்ன!"

"நான் தடுத்துவிட்டேன்; ஆனால் பாதிபட்டணத்தை யிடித்துவிட்டார்கள்."

"ஏன் இடிக்கவேண்டாம் என்றாய்?"

"நாம் இந்தஊரை ஆள்வதை விட்டுவிட்டு, அதை இடிப்பானேன்?"

"நீசொல்லுவதுஞ் சரிதான்."

"மஹராஜ், நல்ல வேளையாய், நல்ல கட்டிடங்களுள்ள பாகம் இடிக்கப்படவில்லை."

"நல்லகாரியம் செய்தாய், இப்பொழுது யாரை எனக்குப் பிரதிநிதியாய் வைக்கலாம்?"

"மாலிக்நாயபை."

"அவன் எந்தஊரிலிருப்பது?"

"இந்த ஊரிற்றான்."

"மாலிக்நாயப் இங்கிருந்துவிட்டால், நமதுசேனையை யார் நடத்துவார்கள்?"

"தாங்கள் சொல்லுவதுசரிதான்; ஆயினும், வேறு எவராலும், இப்பக்கத்துப்பிரஜைகளை யடக்கமுடியாது. கொஞ்சக்காலம் அவர் இவ்வூரிலிருந்து இவ்வூரைப்புதுப்பித்துச் சீர்திருத்திவிட்டால், அப்புறம் யாரையேனுந் தங்களுக்குப் பிரதிநிதியாக இவ்விடத்தில் வைத்துவிட்டுப்போகலாம்."

"இவ்வூரைப் புதுப்பிக்கவேண்டியதுதானோ?"

"ஆமாம்."

"ஏன்?"

"இவ்வளவு நல்லகோட்டை, வேறெங்கும் அகப்படாது; இதில் நமது சாமான்களைவைத்துக்கொண்டு, தென்பாகங்களையெல்லாம் நமது ஆளுகைக்குட்படுத்தலாம்."

"ஆனாற் செய்."

"நல்லது மஹாராஜ்."

"நாளைத்தினமே, டெல்லிக்குப் புறப்படலாமா?"

"புறப்படலாம்."

---

## அத்தியாயம். 6.

---

### வனசஞ்சாரம்.

—:o:—

"சுந்தரி! என்ன சொல்லிக்கொள்ளுகிறாள்?" என்று விஜயை மாடத்தில்நின்றுகொண்டு கேட்டாள்.

"அம்மா! எனக்கு நின்று பதிற்சொல்லுபவர்கள் ஒருவருமில்லை" என்றாள் சுந்தரி.

"நீ போய்க்கேளு."

"இதோ போகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியேபோய்த் திரும்பிவரும்பொழுது, தேம்பித் தேம்பி அழுதுகொண்டே உள்ளேவந்தாள்.

விஜயையது அங்கம் பதறிற்று.

"என்னடி? என்னடி?" என்று கேட்டுக்கொண்டு அவளுங் கதறினள்.

"அம்மா!" என்றாள். அதற்குமேற் சுந்தரிக்கு நாஎழவில்லை.

"என்னடி, சொல்லேன்."

"என்னவாய்ச் சொல்லுவேன்?"

"அம்மா! சுந்தரி! நான்தவிக்கிறேன். என்னை இவ்விதம் வாட்டுவது உனக்குத் தர்மமா?"

"போரில்—"

"சொல்லிவிடேன்."

"நம்மவர்கள் தோற்று விட்டார்களாம்."

"ஐயோ! ஐயோ!" என்று அலறிக்கொண்டு விஜயை மூர்ச்சையற்றுக் கீழேவிழுந்துவிட்டாள். உடனே, சுந்தரி ஓடிப்போய் அவள்கண்களில் நீர்தெளித்து, அவளைத் திரும்பவும் ஞாபகத்துக்குக்கொண்டு வந்தாள். எழுந்ததும்,

"என் நாதன் எங்கே?" என்றாள்.

சுந்தரி மீண்டும் அழுதாள்.

"சுந்தரி! உனக்கு அவரைப்பற்றி ஏதேனுந் தெரியுமோ?" என்றாள் விஜயை மீண்டும்.

"அம்மா!" என்று சுந்தரி அழுதாள்.

"இறந்தாரோ?"

"இல்லை."

"ஏன் அழுகிறாய்?"

"ஆமாம்."

"ஆமாம்" என்றசொல், விஜயையது காதில்விழுந்ததும் மூர்ச்சையற்றுச் சோகமாய் விழுந்துவிட்டாள்; இரண்டு மூன்று விநாடிக்கு அவள் அந்நிலையில் இருந்தாள். உடனே, தனதுடம்பை குலுக்கிக்கொண்டு எழுந்தாள். எழுந்துநிற்கமுடியாமல், திடீரெனக் கீழேவிழுந்தாள்; திரும்பவும் எழுந்தாள்; திரும்பவும் விழுந்தாள். கண்ணில் தாரை தாரையாக நீர்பெருக அழுதாள். அந்தோ! மிகக் கதறினள். 'தேவா! தேவா! இதுவா என்கதி!' என்றலறினாள். சிறிது நேரம் வாய்விட்டழுதாள்; அப்புறம் அவள் ஒன்றுஞ் செய்யச் சக்தியற்று மூர்ச்சையற்றுத் திரும்பவுங் கீழேவிழுந்தாள். தாய்வந்து அவள்துக்கத்தைச் சாந்தப்படுத்துவதற்கு முயன்றும், சிறிதும் இவள் துயரப்படாதிருக்கவில்லை. விஜயைக்கு உயிர்வாழ்ந்திருக்கவே மனமில்லை. எங்கேயாவது ஓடிப்போய் விடுதலே நலமென அவளுக்குத்தோற்றிற்று. ஆயினும் எங்கே போகலாம்? பெண்ணலளோ அவள்; எவனேனுந் துஷ்டன் அவளை மானபங்கப்படுத்தி விடுவானே! என்ன செய்யலாம்? எப்படியாவது தன்பழைய இருப்பிடத்தைவிட்டு நீங்கிப்போய்விடவேண்டுமென்று, அவள் உத்தேசித்து விட்டாள். அவ்வுத்தேசத்தை எப்படிப் பூர்த்திசெய்யலாம்? யாவரவளைப் பாதுகாப்பார்கள்? அவள் எங்கேபோவது? காட்டிற்குட் போகலாமென்றாலோ, துஷ்டஜந்துக்கள் உபத்திரவப் படுத்துமே! வேறுநாட்டிற்குப் போகலாமேவென்றால், அந்நாட்டிற்குப் போவதிற் பயனென்ன? தனது தாய்தந்தையர் துயரத்திலாழ்ந்து இறப்பார்களே! அக்கொடுங் காரியத்துக்கா, இம்மெல்லியள் ஆளாவது! தெய்வமே! என்னவோ செய்நிலைப்

பறையடித்தாற்போல் விஜயையது காதிலடிக்கச் செய்து அவளையாவருத்தினாய்! அவள்மனம் இம்மாதிரி மிகக் குழம்பிக்குழம்பி, வெகுநேரம் ஒரு முடிவுக்கும் வராமலிருந்தது. கடைசியாய் வீட்டை விட்டுப்போவதே நலமெனஅவள் மனத்திற்குத் தோற்றியது. ஆகையினால் மறுநாள் அவள் வீட்டினின்றும் மறைந்தனள்.

காலையில் எழுந்ததும்,

"சுந்தரி! விஜயையெங்கே?" என்றாள் விஜயையது தாய்.

"இங்கேதான் இருந்தார்கள்" என்றாள் சுந்தரி.

"நான் அழைத்துவரச் சொன்னேன் என்று அழைத்துவா?"

"இதோவந்தேன் அம்மணி" என்றுவிஜயையது அறைக்குள்ளே, சுந்தரி நுழைந்தாள். உள்ளே படுக்கையைப்பார்த்தாள்; படுக்கைமேல் ஒன்றையுங்காணோம். தன்கண்கள்தாம் தன்னை மோசஞ்செய்கின்றனவோ வென்று, உள்ளே எல்லாவிடங்களையும் தன்கையாற்றடவிப் பார்த்தாள். எங்கேயும் விஜயை தடைப்படவில்லை. உடனே ஒருபெரியகூச்சலிட்டு விட்டு,

"அம்மா! காணோம்" என்றுகதறிக் கொண்டே, தரையில் விழுந்தாள்.

"என்னடி?" என்றாள் விஜயையதுதாய்.

"காணோம்."

"எங்கே?"

"அறைக்குள்ளே"

"ஐயோ! ஐயோ!" என்று அலறிக்கொண்டு இருவருங்கதறினார்கள். ஒருவரையொருவர் கட்டிக்கொண்டும் அழு

தார்கள். விஜயையது தகப்பனூர்வந்தார். இச்செய்திகாதிற்பட்டதும், மணியிழந்தநாகம் போலாய், வாய்திறவாமலே சிறிதுநேரம் பிரமித்து நின்றூர்; அப்புறம் அழுதார். எல்லாம் ஒரே அழுகைக்குரலாயிருந்தது; விஜயைகாணுமற்போய்க் கொஞ்சக்காலமாய் விட்டது. அவர்களுக்கு விஜயையை எங்கேயாவதுபோய்ப் பார்க்கவேண்டு மென்ற ஆவலுடன் புறப்பட்டு, ஊர் ஊராய் யாத்திரைசெய்து கொண்டிருந்தார்கள். வெகுநாள் அலைந்துபார்த்துக் கடைசியாய்க் காசிக்குப் போகலாமென்று ஆனைகுந்தி நாட்டைவிட்டு இருவரும் அகன்றூர்கள்.

"அண்ணா! நாம் எங்கேபோகிறோம்?" என்றான் புக்கன்.

"எங்கேயாவது தங்குவோமென்றாலோ, வழிமுழுவதும் துருக்கன் நாடாகவேயிருக்கிறது" என்று ஹரிஹரன் சொன்னான்.

"இப்பொழுது எங்கேயிருக்கிறோம்?"

"ராயச்சூர்க் காட்டில்."

"இது வெகுமலையடர்ந்த இடமாயிருக்கிறதே! நாம் எப்பொழுது இதைத்தாண்டிப் போகலாம்?"

"புக்கா! அதைரியப்பட்டால் ஒருகாரியமும்நடவாது. ஆகையால், எப்படியாவது இம்மலைகளின்வழியாக நமது உத்தேசிய இடத்துக்குப் போகவேண்டுமென்ற உறுதியுடன், நீ நடந்துவா. புக்கா! நாம் சாலைகளின்வழியாகச் செல்லலாகாது. துருக்கன், வேலைக்காரர்களை அங்கங்கே நியமித்திருக்கிறான்."

இப்படியே பேசிக்கொண்டு இருவரும், ஒருமலையின் உச்சியையடைந்தார்கள். அவர்களுக்குத் திரும்பவுங் கீழே

யிறங்கவேண்டியிருந்தது. அவர்களுக்கு, மலையிலுள்ள காய்கிழங்குகள் தவிர, வேறொன்றும் தின்பதற்கு அகப்படவில்லை. இதுவரையின் சுமார் நூறுமைல் நடந்தாய்விட்டது. இவர்கள் எங்கேதங்குவோ மென்றாலும், அது துருக்கன் ராஜ்ஜியமாகவேயிருந்தது. ஆகையால், இவர்கள் இருவருந் தீர்க்காலோசனைசெய்து, வாரங்கல் போய்ச்சேர வேண்டு மெனத்தீர்மானித்தார்கள். வாரங்கல், துருக்கன் நாடாயிருந்தாலும், ஒருவேளை அங்கிருப்பவர்கள், இவர்களைப்பிடித்துத் துருக்கனிடங்கொடாமலிருக்கலாம். ஒருவேளை அவர்களும் இவர்களைத்துருக்கனிடம் பிடித்துக்கொடுத்துவிட்டாலோ? அப்படியுந் தெளர்ப்பாக்கியம் நேரிடும்படியிருந்தால், யாரால் அதைத்தடுக்க முடியும்? ஆயினும் மனுஷ்ய யத்தனத்தில் எவ்வளவு செய்யலாமோ அவ்வளவுஞ் செய்வார்கள். தங்களை யெவ்வளவு மாறுவேஷத்தால் மறைத்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவும் மறைத்துக்கொள்ளுவார்கள்.

"அண்ணு! ஏதோ ஓர் உருவம் என்கண்ணிற்றடைப்படுகிறது."

"எங்கே?"

"நமக்கெதிரிலிருக்கும் குன்றின் உச்சியில்."

"ஆமாம்; நானும் பார்க்கிறேன்."

"ஒரு சிறு பையன்போற் காணப்படுகிறது."

"பையன் ஏன் இங்கே வருகிறான்?"

"என்னவோ?"

"பாவமே!புலிகரடி, தின்றுவிடப்போகிறதே அவனை."

"அண்ணு! அண்ணு! பார் அதோ? ஒருகற்பாறைமேல் அப்பையன் படுத்துக்கொண்டான்."

"நாம்போய் அவனைப்பிடிப்போமா?"

"வா! போவோம்" என்று சொல்லிக்கொண்டு, இருவரும் புறப்பட்டு மலையுச்சியினின்றுங் கீழே இறங்கினார்கள். இருவருங் கரடுமுரடாயிருந்த கற்பாறைகளின்மேல் தாவித் தாவிக்கீழேயிறங்கிக் கொண்டிருந்தார்கள். வழியெல்லாம், முள்ளுங் கல்லுமாகவேயிருந்தன; சிற்சிலவிடங்களில், மரமடர்ந்திருந்ததனால், வெகுதூரம் சுற்றிக்கொண்டு போகும்படியாகவும் நேரிட்டது. அவர்கள் இம்மாதிரி மலைத்தாழ்விற் பாதிதூரங் கூடவரவில்லை. அதற்குள், யாரோ ஒருவன் படுத்துறங்கிக்கொண்டிருந்த அப்பையனண்டை வந்தான். சற்றுநேரம் அப்பையனை அவன் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்ததை அவர்கள் நோக்கினார்கள். அதைப்பார்த்தபிறகு அஃது இன்னதென்று அறிந்துகொள்வதற்காகத் தங்களாலியன்றமட்டும் வெகுவேகமாய்ப்போய்க் கொண்டிருந்தார்கள். அப்பையனண்டை வந்து நின்றவன், அம்மாதிரி அதிக நேரம் நிற்கவில்லை; சிறிது நேரத்துக்கெல்லாம் அப்பையனை வாரித்தோளிற் போட்டுக்கொண்டான். தோளிற் போட்டுக்கொண்டு, மலையின் மற்றொரு சாரலின் வழியாகக் கீழேயிறங்கிப் போய்விட்டான். ஹரிஹரனும் புக்கனும் திகைத்து நின்றுவிட்டார்கள்.

"ஆயினும் விரைந்து செல்லுவோம்; வாபுக்கா!" என்றான் ஹரிஹரன்.

"அண்ணா! நாம் தாமசஞ் செய்யக்கூடாது. எப்படியும், நாம் அஃது என்னவிஷயமென்று அறிந்து கொள்ளல் வேண்டும்."

"தேகவருத்தத்தைப் பாராதே" என்று சொல்லிவிட்டு, ஹரிஹரன் வெகு வேகமாய்ப் பாறைகளின் வழியா

கலே அடிவாரத்திற்கு வந்து விட்டான். புக்கனுஞ் சிறிது நேரத்துக்கெல்லாம் அவ்விடம் வந்து சேர்ந்தான். இருவருமாகச் சிறிதுகளைப்பாறிவிட்டு, பாறைகளின்பேரில், தொத்தித் தொத்திக்கொண்டே மலைமேல் ஏறிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் இறங்கிவந்து நேரத்தைவிடச், சீக்கிரத்தில் ஏறிவிட்டார்கள்.

"என்னடா புக்கா! ஒன்றையுங்காணோம்?"

"ஆமாம் அண்ணா! வெகு சீக்கிரத்தில் அவன் பாரத்தையுஞ் சுமந்துகொண்டு, கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தானே."

"நாம் வெகு வேகமாய் வந்தோமே!"

"ஆமாம், அவன் இன்னும் வேகமாய்ப் போயிருக்கலாம்."

"அது முடியாதடா, அவன் ஏதேனும் பாதகனாயிருக்கலாம். நம்மைப்பார்த்தவுடன், ஒருவேளை அவன் தன்னையொளித்துக் கொண்டிருக்கலாம்."

"என்னவோ?"

"நாம் ஓடுவமா?"

"சரி ஓடுவோம்."

"நாம் வந்த வழியைப்போல் இது கரடுமுரடாயிருக்கவில்லை. நீயும் பார் புக்கா!"

"பார்த்தேன்; நீர் சொல்லுவது சரிதான்."

"புக்கா! வருத்தம் பாராதே."

"பாரேன் அண்ணா!"

இவ்வாறு ஒருவரை யொருவர் தேற்றிக்கொண்டு, மலையின் கீழ்ப்பக்கத்தில் வெகு வேகமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள்.

இவ்வாறுயிருக்கையில், அச்சிறுவனை வாரிப்போட்டுக்கொண்டு போனவன், மலைச்சாரலிலிறங்கி, வெகுதூரம் ஒரு சிறுபாதை வழியாகக் கிழக்கே போய்க்கொண்டிருந்தான். போகும்வழியில், ஒரு துருக்கன் இவனைப்பார்த்துவிட்டு, மிகச்சந்தோஷத்தை யடைந்து.

"ஐயா! பிழைத்தோம், பிழைத்தோம்" என, ஆனந்தக்கண்ணீர் பெருக்கினன்.

"மகம்மது!" என்று நரசிங்கன் சொல்லிவிட்டு, மேலே சந்தோஷமிகுதியினால், ஒன்றும் பேசமுடியாமல் நின்றான்.

"நரசிங்கா! நீ யுத்தம் முடிந்ததும் ஓடிவந்து விட்டாயோ?"

"ஆமாம்."

"அப்பொழுது முதல் எங்கேயிருந்தாய்?"

"இப்பொழுது இருக்கிறது போலத்தான் அலைந்துகொண்டிருந்தேன்."

"தோள்மேல் என்னபாரம்?"

"நான் வரும் வழியில், இச்சிறுவன் மூர்ச்சையற்று, ஒரு கற்பாறைமேல் தூங்கிக்கொண் டிருந்தான். இன்னுஞ்சிறிது நேரம் அதேநிலையில் இருந்தால் இறந்திருப்பான். அவனை அந்நிலையில் விடுவதற்கு எனக்கு மனம் வரவேயில்லை; ஆகையால் நான் அவனுக்கு உணவும் தண்ணீருங்கொடுத்து, அவனது களைப்பையாற்றி, நாம் போகுமிடத்திற்குக் கொண்டுபோவோமென்று, தூக்கிக்கொண்டுபோகிறேன். இதோபார் அவன் வதனத்தை; இப்பொழுது அவன் தூங்குகிறான்" என்று சொல்லிக்கொண்டு, அவனது வதனத்தைத்தூக்கி, மகம்மதிடங்காட்டினன். மகம்மது அதைப்பார்த்ததும் மிகவும் இரக்கங்கொண்டு,

அம்முகத்திற்கொரு முத்தங்கொடுத்தான். முத்தங்கொடுத்துவிட்டு "நரசிங்கா! நீ மிகக் களைத்திருக்கிறாய், நான் இச்சிறுவனைச் சுமந்துகொண்டுவருகிறேன். இப்பொழுது எங்கே போகலாம்?" என்று சொல்லிக்கொண்டே, அச்சிறுவனைத்தனது தோள்மேற் சார்த்திக்கொண்டான்.

"வழியெல்லாம் துருக்கன் ராஜ்ஜியமாயிருக்கிறதே!"

"ஆமாம்."

"ஆகையால் நாம் வாரங்கல் போய்ச்சேர்ந்தால் ஒருவேளை பிழைக்கலாம்."

"இவ்விடமிருந்து அஃது எவ்வளவு தூரமிருக்கும்?"

"சுமார், இருநூறுமைல் இருக்கும்."

"அவ்வளவுதூரமா நாம் நடக்கவேண்டும்?"

"ஆமாம்."

"வழியெல்லாம் துருக்கன் தேசம் என்கின்றாயே, நான் எனதாடைகளைக் கழற்றிவிட்டு, உனதாடைகள் போன்ற ஆடைகளையணிந்துகொண்டால், நிர்ப்பயமாய்ப் போகலாமன்றோ?"

"அவ்விதமே, நான் முன்னமே நினைத்தேன்."

"அடுத்த ஊரிற்போனவுடன் புதிய ஆடைகள் வாங்கிவிடுவோமா?"

"வாங்கி விடுவோம்."

"நரசிங்கா! நமது எஜமானரை எங்கே காண்போம்?" என்று சொல்லியழுதான். நரசிங்கனுக்கும் கண்ணில் நீர் ததும்பிற்று.

"ஐயோ! போரில் இறந்தாரோ, என்னவோ தெரியவில்லையே! ஓ ராமா! அவர் பிழைத்திருக்கலாகாதா?" என்று, தடைப்பட்ட வார்த்தையுடன் சொன்னான்.

"நரசிங்கா! நாம் நால்வரும் நின்றோமே, அவர் ஓடினாரோ இல்லையோ, பார்த்தாயா?"

"அவர் ஓடினார்; பார்த்தேன்."

"நான் ஓடவில்லை; என்னைத்துருக்கர்கள்பிடித்துக்கொண்டார்கள்."

"நீ எப்படித் தப்பினாய்?"

"நான் அவர்களுள் ஒருவனென்று சொல்லிக்கொண்டு அவர்கள் பக்கம் போர்புரிவதாக, நமது சேனையுடன் சிறிதுநேரம் போர்புரிந்து கொண்டிருந்தேன். அப்புறம் என்னைக்கவனிப்போர்கள் ஒருவருமில்லை."

இவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டே நடந்துகொண்டிருக்கையிற் சிறுவன் எழுந்தான். எழுந்ததும் அவன் இங்கே யிருக்கிறான் என்பது அவனுக்கே தெரியவில்லை. கண்களை விழித்ததும் நாலாபக்கங்களிலும் திகைத்துப் பார்த்தான். அவன் போய்ப்படுத்த பாறையைக்காணோம்; மலை வெகு தூரத்திற் காணப்பட்டதே தவிர அவன் இருந்தவிடஞ் சமநிலமாகவே யிருந்தது. பக்கத்தில் வேறோர் ஆள் நடந்து வருவதையும் பார்த்தான். தன் நிலையை நினைத்துக் கொண்டான். உடனே கண்ணீர் தாரை தாரையாகப் பெருகவிட்டான். அவனுக்கு என்ன பேசலாமென்பது தெரியவில்லை. இருவரும் முரட்டாட்களாய் இருக்கிறார்கள். அவர்கள் திருடர்தாம் என்று தனக்குள் நிச்சயம் செய்து கொண்டு, பாம்பினிடம் அகப்பட்ட தவளைபோன்று ஒன்றும் பேசாமலே அழுதுகொண்டே யிருந்தான். ஷெயிக், தன்பேரிலிருந்த நீர்ப்பெருக்கையறிந்து, "நரசிங்கா, சிறுவன் அழுகிறானே, பார்" என்றான். இச்சொற் கேட்டதும் சிறுவனுக்கு ஏதோ எண்ணம் தோற்றி, ஒருவேளை தன்

ணையேன் எடுத்துப்போகிறார்கள் என்று கேட்டால், அவர்கள்ஒன்றுஞ் செய்யமாட்டார்கள் எனநிச்சயித்துக்கொண்டு,

"ஐயா! என்னையேன் சுமந்துபோகிறீர்கள்" என்றான்.

"நீ கற்பாறைமேற் படுத்துறங்கினையல்லையோ?" என்று நரசிங்கன் வினவினான்.

"ஆமாம்."

"ஏன்?"

"எனக்கு வாழ்க்கை பிடிக்கவில்லை."

"நீ, மிக்க இளம் பிராயத்தானாயினையே! உனக்கேன் வாழ்க்கை பிடிக்கவில்லை?"

"என்னமோ பிடிக்கவில்லை."

"நீ இருப்பது எந்நாடு?"

"ஆனைகுந்தி."

"ஆனைகுந்தியா!"

"உன் மனையாள் இறந்தாளோ? அல்லது உன்னதையெல்லாம் துருக்கன் அபகரித்துக்கொண்டானோ?"

"இரண்டுந்தாம்"

"நீ எங்கே புறப்பட்டாய்?"

"உயிர் துறப்பதற்கு."

"உயிர் துறப்பதிற் பயனில்லை. எங்களுடன்கூட வா; எங்களுக்கு எஜமானனாய் இரு; நாங்கள் உன்னோடுகூடவிருந்து, நாம் எல்லோருமாய் நலம் அடைவோம்."

"யாரோ ஒருதுருக்கன் கூட நிற்கின்றானே?"

"இருந்தால் என்ன! அவன் நமக்கு வேண்டியவன் தான்; நமக்கு நிரம்பவும் ஆப்தன்."

இங்ஙனம் பேசிக்கொண்டு இம்மூவருமாய் அடுத்த ஊரிற்கு வந்து, ஷெயிக்குக்கு துருக்கன் உடுப்பை மாற்று

வித்து, மறுபடியும் வாரங்கல் நோக்கிப் புறப்பட்டார்கள். வழியிற்போகும்பொழுது, இவ்விருவரும் சிறுவனிடம் தாங்கள் ஹரிஹரன் ஊழியர்கள் என்பதை வெளியிட்டார்கள். விஜயைக்கு நிரம்பவுஞ் சந்தோஷமாயிற்று. நரசிங்கன், ஹரிஹரன் யுத்தகளத்தைவிட்டு ஓடியதைப் பார்த்தானென்பதைக்கேட்டுச் சிறுவன் மனம்பூரித்தான். ஒருவேளை அவன் பிழைத்திருக்கலாமென்ற எண்ணங் கொண்டு, எந்நாட்டிலும் போய்த் தேடலாமென்று தீர்மானித்தான். மெல்லமெலலப் பதினைந்து நாளைக்கெல்லாம் வாரங்கல் வந்துசேர்ந்தார்கள்.

## அத்தியாயம் 7.

### வித்யாரண்யமுனிவர்.

சீலம், ஒழுக்கம், தெய்வபக்தி, பெருந்தகைமை எல்லாம் ஒருங்கே கூடியவராய், வயதுமுதிர்ந்து யாவரும் பார்த்தவுடனே தம்மிடத்தில் மரியாதையை ஜனிப்பிக்கத்தக்க உருவத்தையுடையவராய், எந்நேரமும் உலகத்தார் நலத்தையே தேடிக்கொண்டு, மற்றையோர் இன்பம் அடைந்தால் தாமே இன்பம் அடைந்ததாக நினைத்துப் பிறர் சுகத்தைப் பார்த்து இன்பத்தையடையும் கருணைகுணத்தையு முடையவராய், பகவானது அவதாரம்போலவே தோன்றிய வித்யாரண்யர் என்னும் மஹர்ஷி, வாரங்கல்நகரத்திற் குடிகொண்டிருந்தார். அவர் வயது முதிர்ந்த ஒரு சந்நியாசி; அவர் அநேகம் சிஷ்யர்களுடன் ஊருக்கு ஒதுக்குப்புறமாயிருந்தவிடத்தில் ஓர் ஆச்சிரமத்தி லிருந்துகொண்டு சகல சாஸ்தி

ரங்களையும் அவர்களுக்குக் கற்பித்துக் கொண்டிருந்தார். 1323 - ஆம் வருஷத்தில் வாரங்கல் துருக்கன் கையில் விழாதிருக்க வேண்டுமென்று, தன்னுலியன்றமட்டும் முயன்ருர். அவர் என்னமுயன்றும், தெய்வசம்மதம் வேறுவிதமாயிருந்ததனுல், அவர்முயற்சி பயனற்றுப்போயிற்று. ஐயோ! கீழ்ப்படிந் திருக்கவேண்டி யிருக்கிறதேயென்று, தினந் தினம் தமது சிஷ்யர்கள்முன் ஒருமுறை அழுவார். சிஷ்யர்கள் அவர் சொல்வதையெல்லாம், மனவுருக்கத்துடன் கேட்பார்கள். அவர்கள் சொல்வதைக்கேட்க முடிந்ததேதவிர வேறென்றுஞ் செய்யமுடியவில்லை. ஆயினும் அம்மகானது எண்ணஞ் சீக்கிரத்திற் பூர்த்தியாயிற்று. அவரிடமிருந்த தெய்வத்தன்மையை யென்னென் றுரைப்பது! மெலிந்து வாடிய உருவத்தராயிருந்தாலும், அவர் முகத்திலிருந்த காந்தி யாவரிடத்திலுங் காணப்படாததாயிருந்தது. எப்பொழுதுமே துருக்கனிடங் கீழ்ப்படியாமல், நமது நாட்டோனுக்கே நாம் கீழ்ப்படிந்திருக்க வேண்டுமென்று தம்மைக்காண்போர் எவருக்கும் போதித்துவந்தார். சிலர், தாம் நல்ல உலகமடைவதற்காகவே முயன்று, வேறு யாவர் விஷயத்தையுங் கவனியாமலிருந் திருக்கிருர்கள். அவர்களும் உலகத்துக்கு நன்மை செய்வார்கள்தாம். ஆயினும் அவரினும் உயர்ந்தோர்கள் குழாத்திற் சேர்ந்தவர் வித்யாரண்யர். இம்மகான் வாரங்கல் நாட்டில், கோதாவரி தீரத்திற் பிறந்துவளர்ந்தவர். கொஞ்ச நாட்களுக்குத் தமது மனையாளுடன் கூடியிருந்தார். அவர் மனையாள் இறந்துவிட்டாள்; அவருக்கு மக்களில்லை; அவர் உடனே சந்நியாசம் வாங்கிக் கொண்டு, அப்பொழுது முதல் எல்லோருக்கும் நன்மை புரிவதிலேயே முயன்றிருந்தார். வாரங்கலின்மேல் துருக்கன்

படையெடுத்தபொழுது, அவர் ஜனங்களையெல்லாம் துருக்கனுக்கு எதிர்நின்று சண்டையிடச் சொன்னார். ஆனால், அவ்வூரிலிருந்தோர்களெல்லோரும் இம்மகானை லக்ஷியஞ் செய்யவில்லை. ஆகையால் வாரங்கல் துருக்கனுக்கு இரையாயிற்று. 1323-ஆம் வருஷம்முதல், டெல்லி அரசனுக்கு வாரங்கலில் ஒருபிரதிநிதி இருந்துகொண்டிருந்தான். ஆனால் அவன் பணம்மாத்திரம் ஜனங்களிடமிருந்து வாங்கிக்கொண்டிருந்தானேதவிர, நாட்டின் உள்விசாரணையை ஹிந்துக்களே பார்த்துக்கொண்டு வந்தார்கள். அதன் பொருட்டுத்தான் வித்யாரண்யருக்கு ஹானி ஒன்றும் நேரிடாமலிருந்தது.

"புக்கா! இது தான் வாரங்கலாம்" என்றான் ஹரிஹரன்.

"இதுதானா!"

"டொக்லாக் நாடுதானே இது?"

"ஆமாம்."

"நம்மை யாராவது பிடித்துக்கொடுத்து விடுவார்களோ!"

"நம்மை ஒருவரும் கவனிக்கமாட்டார்கள்."

"துருக்கன் உத்தியோகஸ்தர்கள் இங்கே இல்லையோ?"

"துருக்கர் வெகுபெயர்கள் இங்கு இல்லை. நம்மவர்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் சண்டைசச்சரவுமாயிருக்கிறபடியால், இவர்கள் ஒன்று சேரமட்டார்கள் என்னும் தைரியத்தால், துருக்கன் நம்மவர்களையே வைத்துக்கொண்டு வேலையைநடாத்துகிறான்."

"அப்படிச் செய்வோர்கள், தங்கள் நலத்தையுத்தேசித்து, நம்மையும் பிடித்துக்கொடுத்து விடலாமே."

"ஆமாம்."

"ஆகையால் நாம் கொஞ்சம் சாக்கிரதையாயிருக்க வேண்டும்."

"ஊரிலுள்ளோர் நோக்கத்தை யறிந்து கொள்ளுவோம். அதற்குமேல் எப்படி உசிதமோ அப்படிச் செய்வோம்."

"இங்கேயிருக்கச் சரிப்படாவிட்டால்?"

"அதைப்பற்றி அப்புறம் யோசித்துக்கொள்வோம்."

"ஆனால் உள்ளே போவோமா?"

"போவோம்."

"ஒரு வேலைக்காரனை நாம் நியமித்துக்கொள்ள வேண்டும்."

இவ்விதம் பேசிக்கொண்டு இவர்கள் சற்றுத்தூரம் போனதும் வித்தியாரண்யருடைய ஆச்சிரமம்நெருங்கிற்று, அதை ஹரிஹரன் பார்த்தான்; மிகவுங் களித்தான்.

"புக்கா! பெரியவர் ஒருவர் இங்கே இருக்கிறாரடா. நாம் போய்ப்பார்ப்போமா?" என்றான்.

"அவர் என்னவோ சொல்லிக்கொண் டிருக்கிறாரே."

"ஆமாம்."

"ஆனால் நாம் மெல்லப்போய், தூர நின்றுகொண்டு அவர் சொல்லுவதைச் செவிகொடுத்துக் கேட்போம்."

"அப்படியே" என்று சொல்லிவிட்டு, இருவரும் ஆச்சிரமத்திற்குள்ளே நுழைந்தார்கள். ஆச்சிரமத்திற் குள்ளே கூட்டம் மிகுதியாயிருந்தது; இவர்கள் போனவேளையில் வித்யாரண்யர் பின்வருமாறு சொல்லிக்கொண் டிருந்தார்:—

"ஐயன்மீர்! உங்களையெல்லாம் ஒன்றுசேர்த்து நான் துருக்கனுக்கு எதிர்நின்று போர்செய்யச் சொல்லவில்லையா?

என்னை நீங்கள் லக்ஷியஞ் செய்தீர்களில்லை. இப்பொழுது துருக்கன் உங்களை வருத்துகிறனென்றால், நமது பலமெல்லாஞ் சிதறிப்போனபிறகு என்ன செய்யக்கூடும்? அப்படியே நீங்கள் திரும்பவும் போர்புரிவதாக வைத்துக்கொள்வோம். உங்களுக்கு விரோதிகள் வெகுபெயர்கள் இருக்கிறார்களே! தெய்வமிழந்து, தனதுநாடு என்னுமெண்ணத்தையிழந்து, அடிமையாயிருப்பதற்கிசைந்த பாதகர்கள் எத்தனையோ பெயர்கள் இருக்கிறார்கள். இவர்கள் தொலைந்தாலன்றோ, நமது நாட்டிற்கு நல்வழிபிறக்கும்; இவர்கள் உயிருடன் இருப்பாராகில், நாம் துருக்கனது கொடுங்கோலரசாட்சியினின்றும் மீளமுடியாது. இவர்களை நமதுவசம் ஆக்கிக்கொண்டால் நாம் வெற்றியையடையலாம்.

"ஐயா! உங்களுள் அம்மாதிரியானவர்கள் ஒருவருமில்லையென நம்புவேன். ஆயினும் அப்பேர்பட்டவர்கள் இங்கு இல்லையென நான் நிச்சயமாய்க் கொள்ளமாட்டேன். இம்மாதிரிதான் நான் சொல்வதை வெகு பயபக்தியுடன் கேட்பவர்போலக்கேட்டு, சிலர், நான் துருக்கனுக்குவிரோதமாய்ச் சொன்னேனென்று அவனிடம் போய்ச் சொன்னார்கள். அவன் என்னவோ அச்சமயம் என்னைக் கவனிக்கவில்லை. என்னைக் கவனித்திருந்து என்னைத் தண்டித்திருந்தாலும், நான் அதை லக்ஷியஞ்செய்திருக்கமாட்டேன். இப்பொழுதும் நீங்கள் என்னைப்பற்றித் துருக்கனிடம் போய்ச்சொன்னாலும், நான் அதற்காகச் சிறிதும் பயப்படமாட்டேன். நானேதுறவி; நான் உயிர்வாழ்ந்திருப்பதெல்லாம் பிறர் நலத்துக்காகவே தவிர, என் நலத்துக்காகவேயன்று. எனக்கு என்ன வேண்டும்? பகவானைத் தியானித்துக் கொண்டு, உங்களுக்காக உழைக்கவேண்டியதுதான். நீங்களே

என்னை அத்துருக்கனிடம் பிடித்துக்கொடுப்பீராகில் எனக்குச்சிறிதும் நஷ்டமில்லை. சாவு எனக்கு ஒரு பெரிதன்று. எனக்காக, நான் இருந்தாலுஞ் சரிதான், இறந்தாலுஞ் சரிதான்: ஆகையால், நண்பர்களே! உங்களுக்கு எது நலமென்று தோற்றுகிறதோ அதைச் செய்யுங்கள். துருக்கனை யெதிர்த்து, அவனைப் போரில்வென்று, நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள விருப்பமுடையவராயிருந்தால், நான் உங்களுக்கு எவ்வித உதவியும் புரிவேன். அல்லது, துருக்கனுக்குக் கீழ்ப்படிந்திருந்து, அவனுக்கு அடிமையாய், இப்பொழுது இருப்பதுபோல, நாட்டையிழந்து, நலத்தை யிழந்து, செல்வத்தையிழந்து, தெய்வத்தையிழந்து, யாவரும்பார்த்து நகைக்கும்படியான நிலையிலிருக்க விருப்பமுடையீராகில், உங்கள் விருப்பத்துக்கு மீறிநடப்பவர்கள் ஒருவருமில்லை; நீங்கள் அடிமையாகவே யிருந்து உயிர் வாழலாம்.

''நண்பர்காள்! உங்கள் உடைமை யெல்லாம், துருக்கர்களாற் கொள்ளையடிக்கப்பட்டன; உங்கள் கோயில்களிலிருந்த திரவியத்தை யெல்லாம், துருக்கன் எடுத்துப்போயினான்; உங்கள் கோயில்களிலுள்ள விக்கிரகங்களை யெல்லாம் பின்னப்படுத்திவிட்டு, துருக்கன் ஊர்போய்ச்சேர்ந்தான். உங்களைப்பார்த்தால், தனது நாயைப்பார்ப்பதுபோல் அவன் பார்க்கிறான். அவர்களிடம் கீழ்ப்படிந்திருக்க உங்களுக்குச் சம்மதமா? இவ்விதமிருப்பதற்குச் சம்மதித்திருப்பதைவிட, தற்கொலைபுரிந்துகொள்ளுதல் பாவமன்று. நான் அதற்கு எவ்விடத்திலும், எவ்விதத்தாலும் பிரமாணஞ்செய்வேன். அதையும் பொறுத்துக்கொண் டிருக்கச் சம்மதித்தது மல்லாமல், மேலும், உங்களுக்குள் ஒருவருக்

கொருவர்மேற் கோளையுஞ் சொல்லிக்கொண்டு திரிகின்றீர்களே! சிறிதும் வெட்கமில்லையோ?

"ஐயோ! நான் இனி இதைப்பற்றிச் சொல்வதற்கு இஷ்டமில்லை. உங்களுக்கு எப்படி உசிதமோ அப்படிச் செய்யுங்கள். என்னைக்கேட்டால் நீங்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து துருக்கனை வெருட்டியோட்டிவிட வேண்டுமென்றுதான் சொல்லுவேன்."

"அண்ணா! அந்த மகான் என்ன சொல்லுகிறார் கேட்டயா?" என்றான் புக்கன்.

"சற்றுப்பொறு; இன்னும் என்ன சொல்லுவாரோ அதைக் கேட்போம்."

"அவர் சொல்லவேண்டியதையெல்லாஞ் சொல்லி முடித்துவிட்டாரே."

"ஆமாமடா புக்கா!"

"இங்கேயே தங்கிவிடுவோமா?"

"அப்படியே; இம்மகானுடன் கூடவிருந்தாலே, நமக்குப் பகவான் அனுக்கிரகஞ்செய்வார்."

"ஆனால் அவருக்கு முன்னிலையிற் போய் நிற்போம்."

"சற்றுப்பொறு."

"ஏன்?"

"நமது பூர்வஸ்திதியை அவரிடம் வெளியிடலாமா?"

"வெளியிடுவோம். இவரிடத்திலா நாம் பொய்யைச் சொல்லுவது?" என்று இருவருமாக வித்யாரண்யர் முன்னேபோய் நின்று, அவரை ஒரு நிமிஷம்வரைக்கும் உற்றுப் பார்த்தார்கள். உடனே கீழேவிழுந்து அவரைச்சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்துவிட்டுத், திரும்பவும் எழுந்து நின்றார்கள்.

"நீங்கள் யார் தெரியவில்லையே?" என்று வினவினார் வித்யாரண்யர்.

"நாங்கள் இருப்பது ஆனைகுந்தி" என்றான் ஹரிஹரன்.

"ஆனைகுந்தியா?"

"ஆமாம்."

"அதைத்துருக்கன் பிடித்துக்கொண்டானாமே?"

"ஆமாம்."

"நீங்கள் அரசனது வம்சத்தைச் சேர்ந்தவர்களோ?"

"அல்லேலம்; நாங்கள் அரசன் சேனாதிபதிகளா யிருந்தோம்; யுத்தத்தில் தோற்றுப் போனவுடன், திக்குத்திசை யொன்றுந் தெரியாமல் அலைந்து, கடைசியாகத் தங்களிடம் ஓடிவந்தோம்."

"தீர்க்காயுஷ்மான்பவ" வென்று அவர்களை வித்யாரண்யர் ஆசீர்வதித்துவிட்டு, "நீங்கள் மிகவும் அலைந்திருக்கிறீர்கள். சாப்பிட்டுவிட்டுச், சிறிதுநேரம் தேக வருத்தத்தை யாற்றிக்கொள்ளுங்கள்" என்றார் அம்முனிவர்பெருமான்.

அந்தோ! பாவி பொறாமைக் குணமும் தன் நயம் பாராட்டுங் குணமுமல்லவோ உலகத்தில் நிகழ்கின்ற தீமைகளையெல்லாம் விளைக்கின்றன? ஹரிஹரனைப் பிடித்துக்கொடுப்போர்களுக்கு, வரி யில்லாமல் ஒரு கிராமத்தைக்கொடுப்பதாக டொக்லாக்கினது வாரங்கற்பிரதிநிதி பறைசாற்றி யிருந்தான். ஹரிஹரன் சத்தியத்தையே பேசவேண்டுமென நினைந்து, யாவரு மிருக்குமிடத்தில், வித்யாரண்யரிடம் தன்னுடைய சரியான நிலைமையை ஒத்துக்கொண்டான். புக்கனுக்குத் தங்களது சரியானநிலைமையை வெளியிட்டால் ஒருவேளை தீங்குநேரிடுமோவெனப் பயமிருந்தது. ஆனால், "மூத்தோர் சொல்லும் வார்த்தை யமிர்தம்" என்னும்

ஔவைப்பிராட்டியின் முதுமொழியை யுட்கொண்டு, ஹரிஹரன் சொல்வதற்குத் தடைசொல்லாமலே யிருந்துவிட்டான். இவர்கள் தங்கள்பெயரைச் சொல்லிக்கொண்டதும், இரண்டு பாதகர்கள் வெளியேயோடி, ஹரிஹரன் வரவைத் துருக்கனுக்குத் தெரிவிப்பதாகத் தங்களுக்குள் தீர்மானித்துக் கொண்டார்கள். வித்யாரண்யர்செய்த உபந்யாசம் ஒரு வார்த்தைகூடத்தவறுமல், யாரோ ஒரு பாதகன் வழியாய்த், துருக்கன் காதிற்கெட்டியது. இவ்விருவரையும்பிடித்துக் கடுந்தண்டனை விதிப்பதாக உத்தேசித்து, துருக்கர் வெகு சந்தோஷத்தை யடைந்திருந்தார்.

## அத்தியாயம் 8.

### முனிவர் உபந்யாசம்.



இச்செய்தி புக்கனுக்கு வெகு சீக்கிரத்தில் எட்டியது. புக்கன் ஊரைப்போய்ச் சுற்றிப் பார்ப்போமென நினைந்து, ஏதோவொரு தெருவழியாகப் போய்க்கொண்டிருக்கையில், கலகமில்லாமல் ஹரிஹரனையும் வித்யாரண்யரையும் பிடிக்க வேண்டுமென்று, துருக்கர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்தார்கள். சிறிதுநேரம் அவர்கள் பேசியதை ஒற்றுக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, வெகு வேகமாய் ஆச்சிரமத்திற்கு ஓடிவந்தான். "அண்ணா ஒரு விசேஷங் கேள்வியுற்றேன்."

"என்ன?"

"நாம் வந்திருப்பதைத் துருக்கன் அறிந்துவிட்டான்."

"எப்படி யறிந்தான்?"

"எப்படியோ? இன்று இராத்திரி தங்களையும் நமது மகானுகிய வித்யாரண்யரையும் பிடிப்பதற்கு ஏற்பாடு நடந்துகொண்டிருந்தது. நான் அதை ஒற்றுக் கேட்டுக்கொண்டிருந்தேன். நாம் அவரைத் தூக்கிக்கொண்டு, எங்கேயாவது ஓடவேண்டும்."

"ஊரிற்குக் கீழ்ப்பக்கத்திற் போகமுடியாதே; அங்கே ஏதோ காரணத்திற்காகச் சைனியத்தை வைத்திருக்கிருர்களாம்."

"நாம் வந்த வழியிலுள்ள காட்டிற்கே போய்ச் சேருவோம்."

"ஆனுல் அவர் சிஷ்யர்களில் முதன்மையானவர்களுக்கு இச்செய்தியைத் தெரியப்படுத்து."

"நான் அதை அவர்களுக்குத் தெரியப்படுத்துவேன். துருக்கர்கள் பதினைந்துநாழிகைக்கு ஆச்சிரமத்திற்கு வரப்போகிருர்களாம். நாம் அஸ்தமித்து ஐந்து நாழிகைக்குப் புறப்பட்டுவிட வேண்டும்" என்று சொல்லிப் போய்விட்டான்.

அஸ்தமனமாயிற்று; இச்செய்தியை வித்யாரண்யருக்குத் தெரியப்படுத்த வேண்டாமென்று தீர்மானித்தார்கள். அவருக்குத் தெரியப்படுத்தினுல், ஒருவேளை 'என்னைத் துருக்கன் வந்தெடுத்தால் நான் பதிற் சொல்லிக்கொள்ளுகிறேன்' என்றவர் சொல்லிவிட, துருக்கர்கள்கொண்டுபோய் அவரை வருத்தப்போகிருர்களே யெனப் பயந்து, குறிப்பிட்ட நாழிகைக்கு வித்யாரண்யரை அவரது அமளியுடன் நால்வர் தூக்கிக்கொண்டுபோனுர்கள். துருக்கன் கோட்டைவாசற்படியிற் காவல் வைத்திருந்தான். இக்காவலைத் தாண்டிப்போவதிற் சிறிதும் சச்சரவில்லாமலிருக்கவேண்டுமென

நினைத்துக், காவலாளியினிடம் தாங்கள் மயானத்துக்குப் பிணத்தைச் சுமந்துபோவதாகச் சொன்னார்கள். காவலாளன் அவர்கள் அப்படிச்செப்பியதும், அவர்களைப்பற்றிக் கவனிக்கவில்லை. இவர்கள் மிகச்சந்தோஷத்துடன், கோட்டைவாசலைத் தாண்டி, மேற்புறமாகத் தாங்கள் நடந்து சென்றார்கள். இவர்கள் வெகு வேகமாய் ஓடியும், வித்யாரண்யருக்குச் சிறிதும் தேகத்தில் வருத்தந் தெரியாதபடி, அவரைத் தாங்கிச் சென்றார்கள். பொழுது விடிந்ததும் இவர்கள் நான்கு காதவழி நடந்தாயிருந்தது. மலைகளுக்கு நடுவிலுள்ள ஒருகாட்டில், தங்களதுபாரத்தைக் கீழே யிறக்கிவைத்தார்கள். வைத்ததும் அவர் எழுந்தார்; எழுந்து, இங்கும் அங்கும் பார்த்தார்; ஹரிஹரன், புக்கன் மற்று நான்கு சிஷ்யர்கள் எல்லோரும் விழுந்து நமஸ்கரித்தார்கள்; அவர் மிகக்கலங்கி, "என்ன விசேஷம்" எனக் கேட்டார்.

"தங்களைப் பிடித்துப் போவதற்காகத் துருக்கன் ஏற்பாடு செய்துகொண்டிருந்ததைப் புக்கன் அறிந்துகொண்டு வந்ததும், நாங்கள் அவர்கள் நியமித்த நேரத்திற்கு முன் தங்களைத் தூக்கிக்கொண்டு இவ்விடம் வந்துசேர்ந்தோம்."

"நான், இன்றுகாலை சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்தாயோ?"

"இருந்தேன்; மேலும், நான் தங்களிடம்வந்திருப்பதையும் துருக்கனுக்கு யாரோ போய்ச் சொல்லியிருக்கிறான்"

"அடா!"

"இப்பொழுது என்ன செய்யலாம்?"

"ஆனைகுந்திக்கே போவோம்."

"போய்?"

"இவ்விடத்தி லிருப்போர்கள் நீங்கள் சொல்வதைக் கேட்பார்கள் அல்லரோ?"

"கண்டிதமாய்."

"ஆனால், நாம் அங்கேயே போவோம்."

"தாங்கள் சொன்னாற் சரிதான்."

அப்புறம் இவ்வெழுவரும் ஆனைகுந்திக்குப் போகப் புறப்பட்டார்கள்.

இதற்குள் வாரங்கலில், நரசிங்கன், சிறுவன், இவ்விருவருமாகத் தெருவிற் போய்க்கொண்டிருந்தார்கள். ஷேயிக் ஓடிவந்து "நரசிங்கா! இங்கே வந்திருந்தாராம்." என்றான்.

"இங்கா!" என்று மிகப்பூரித்துக் குதித்தான் சிறுவன்.

"ஆமாம்."

"எங்கே அவர்?"

"அவர் வரவு துருக்கனுக்குத் தெரிந்துவிட்ட தென்பதையறிந்து நேற்று இராத்திரி ஓடிவிட்டாராம்."

"நான், இன்று காலை சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தாயோ?"

"எங்கே?" என்றார்கள் இவ்விருவரும்.

"நாம்வந்த வழியேதானாம்."

"ஆனால், ஒரு நிமிஷமாவது சலியாமல் நாம் ஓடவேண்டும்" என்றான் சிறுவன்.

இம்மூவரும் மிகப்பூரித்துத் தாங்கள் வந்தவழியேதிரும்பி, வெகுவேகமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். காட்டில் இவர்கள் எந்தவழியாய்ப் போனார்களென, ஒவ்வொரு கிராமத்திலும் போய்த் தங்கி விசாரித்துப் போய்க்கொண்டிருந்தார்கள். அச்சிறுவனுக்கு ஹரிஹரனைக் காணவேண்டுமென்ற அவா மிகுதியாயிருந்ததனால், அவ்விருவரும் தங்க

வேண்டுமென்றிருந்தாற்கூட, இவன் அவர்களை வெருட்டிக் கொண்டு வழிமுழுவதும் நடந்தும், தளர்ச்சியடைந்ததை வெளியிடாமலிருந்தான். சிறுவனுக்கு ஹரிஹரன்மேல் ஏன் அவ்வளவு அன்பு வாய்ந்திருக்கவேண்டு மென்பது, ஒருவராலும் அறியக்கூடாத விஷயமாயிருந்தது. அவர்கள் இச் சிறுவனைக் கேட்கவும் அஞ்சினார்கள். முதலிலே, ஹரிஹரனது வேலையாட்களாக இவர்களை யறிந்துகொள்ளும் வரையில், சிறுவனுக்கு இவர்களிடம் நம்பிக்கையே யில்லை. அவர்கள் 'ஹரிஹரனைத் தான் தேடிச்செல்லுகிறோம்' என்று சொன்னபின்பு, சிறுவன் அவர்களை நம்பத்தொடங்கினான். அவர்களோடு பழக்கம் ஏற்பட்டு வெகுநாட்களாயின. அவர்களும் சிறுவன் பேச்சைத் தட்டாமலே நடந்துகொண்டு வந்தார்கள். ஹரிஹரன் ஆனைகுந்தி நாட்டிற்கே சென்றிருக்கிறான் என்பதைக் கேள்வியுற்றார்கள்; இவர்களும் அங்கே சென்றார்கள்.

ஒருநாள் மூன்று சந்நியாசிகள் ஆனைகுந்தி நகரத்தினுள்ளே

"அர்த்தமனர்த்தம் பாவயநித்யம்
நாஸ்திததஸ்ஸுகலேசஸ்ஸத்யம்
புத்ராதபிதனவாஜாம்பீதிஹி
சர்வத்ரேஷாரைதாவிஹிதஹ
பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே" எனச் சங்கராசாரியரது சுலோகத்தைச் சொல்லிக்கொண்டே தெருவீதியி லலைந்து கொண்டிருந்தார்கள்.

நன்றாய்க் காவிபடிந்த காஷாயத்துடனும், கையில் தம்பூர்முதலிய வாத்தியங்களுடன் வெகு அழகாய்க் கேட்

போர் மனத்தையெல்லாம் உருக்கும்படியான குரலுடன் பாடிக்கொண்டு போவதை வந்து பாராதார் யாவர்? டொக்லாக், பிரதிநிதியை நியமித்துவிட்டுத் தான் ஊருக்குச்சென்றதும், எல்லாரும் தங்கள் தங்கள் வீடுவந்து சேர்ந்தார்கள். மாலிக்நாயப் இடிந்திருந்த வீடுகளையுங் கட்டிக்கொடுத்து விட்டான். போர்நடந்து மூன்றுமாதமாய்விட்டது; ஊரில் முன்போலவே ஜனக்கூட்டம் மிகுதியாயிருந்தது. இவர் இம்மாதிரி பாடிக்கொண்டே போவதை உள்ளிருந்தோர் கேட்டு, இவர்களை வந்து பார்ப்பதற்காக வாசலில் ஓடிவந்து நின்றார்கள். இவர்களைப் பார்த்ததும் எல்லோருக்கும் இவர்களிடம் ஒருவித அன்பும் மரியாதையும் பயமும் ஒருங்கே ஜனித்தன. அநேகர் இவர்களுடன் கூடவே சென்றார்கள். இப்பெருமான்களுக்கு மிகுந்த மரியாதைகள் நடந்தன.

ஆச்சிரமத்துக்குப் போய்ச்சேர்ந்ததும், மூவர் வந்து காத்துக் கொண்டிருந்தார்கள். இம்மூவரைக் கண்டதும், வந்திருந்த மூவரும் இவர்கள் அடிபணிந்து, "தேவே! உங்களிடம் அடைக்கலம் புகுந்தோம்; நீங்கள்தாம் எங்களைக் காப்பாற்றவேண்டும்" என்றார்கள்.

'நீங்கள் யார்?" என்றார் வயது முதிர்ந்தவராகிய சந்நியாசி.

"இந்நாட்டிற்காகப் போர்புரிந்தோம்; போரில்தோல்வியடைந்தோம். அப்புறம் எங்களது எஜமானராகிய ஹரிஹரரைத் தேடிக்கொண்டு, வாரங்கல் வரைக்கும் போய்ப் பார்த்தோம். அவர் அவ்வூருக்கு வந்திருந்து மீட்டும் ஓடிவந்துவிட்டதாகக் கேள்வியுற்றோம். இந்த ஊரில்வந்து, துருக்கன் அறியாதபடி எல்லாமூலைகளிலுந் தேடிப்பார்த்

தோம்; அவர் அகப்படவில்லை. ஆகையால் உங்களிடம் வந்து அடைக்கலம் புகுந்தோம்.''

"உங்கள் பெயரென்ன?''

"நான் நரசிங்கன்'' என்றான் நரசிங்கன்.

"நான் இராமன்'' என்றான் ஆலி.

"நான் கிருஷ்ணன்'' என்றான் அச்சிறுவன்.

இவர்களைப் பார்த்ததும் இளஞ் சந்நியாசிகள் இருவருக்கும், மனத்தில் மிகுந்த குழப்பம் உண்டாயிற்று. "எங்கள் எஜமானனாகிய ஹரிஹரரை'' யென்றவுடன் ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டார்கள். அவர்களுள் மூத்தோன் பேசத்தொடங்கினான். அதற்குள் வயதுமுதிர்ந்த சந்நியாசி கையசைக்க, வாயைமூடிக்கொண்டு பேசாமலிருந்துவிட்டான். இம்மூவரும், தங்கள் வரலாற்றை அச்சந்நியாசிக்குச் சொன்னார்கள். சொல்லும்பொழுது, இவ்விருவரும் மிகவுஞ் சலித்துக்கொண்டு தங்களது பேச்சையடக்கிக் கொண்டிருந்தார்கள்.

கடைசியாய் இம்மூவரையும், அடைக்கலமாகக் கொண்டுவிட்டார்கள்; அவர்களுக்குவேண்டிய அளவு சௌக்கியத்துக்கு ஏற்பாடுஞ் செய்தார்கள்.

அன்று இராத்திரி பன்னிரண்டு நாழிகையாயிற்று. நரசிங்கன், ஆழ்ந்த துக்கத்திலாழ்ந்திருந்தான். வித்யாரண்யர் வந்து ஹரிஹரனைத் தட்டியெழுப்பினார். ஹரிஹரன் சரேலென வெழுந்தான். புக்கனையும் அழைத்துவரலாமாவென்று கேட்டதற்கு, வித்யாரண்யர் வேண்டாமெனச் சொல்லிவிட்டார். உடனே இருவருமாக ஆச்சிரமத்திலிருந்து ஊருக்குள் நுழைந்தார்கள். உள்ளே, தெருக்களில் ஒருவனுமில்லை. அன்றைத்தினம் அமாவாசியை; மிகுந்த

இருட்டினால் ஊர் சூழப்பட்டிருந்தது. ஹரிஹரனும் வித்யாரண்யரும் சிறிதுஞ் சப்தஞ்செய்யாமல், தெருவழியே போய்க்கொண்டிருந்தபொழுது, ஒருவன் எதிரில்வந்து நின்றுகொண்டு இவர்களைக் கும்பிட்டான். கும்பிட்டதும் வித்யாரண்யர் அவ்விடத்திலேயே நின்றார். உடனே அவன் "ஸ்வாமி! உங்களுடைய கண்களைக் கட்டிவிட்டுத் தான் உங்களையவ்விடம் அழைத்துப்போக முடியும்" என்றான்.

"அப்படியே" என்றார் வித்யாரண்யர்.

உடனே இவ்விருவருடைய கண்களையும் தனது வஸ்திரத்தாற்கட்டி, இவர்களுடைய கண்களை மறைத்தான். மறைத்துவிட்டு, இருவரையும் எவ்வெவ்விடங்களின் வழியாகவோ, அழைத்துச் சென்றான். வழியில் ஓரிடத்திற் போகும்பொழுது "ராம் ராம்! சீதாராம்!" என்றான்; மற்றொருவன், இச்சப்தத்தைக்கேட்டதும் "இதோவந்துவிட்டேன்" எனச் சொல்லிக்கொண்டு ஓடிவந்து, ஏதோ ஒருபெரிய கதவைத்திறந்தான். பிறகு எத்தனையோ மூலைமுடுக்குக்களின்வழியாகவும், வாசற்படிகளின் வழியாகவும், இவ்விருவரையும் அவன் அழைத்துச்சென்றான்; போகும் வழியெல்லாம் ஒரேசப்தமாயிருந்தது. கணக்கில்லாப்பெயர்கள் கூட்டங்கூட்டமாய்த் தனித்தனியே உட்கார்ந்துபேசிக்கொண்டிருந்தார்கள். அது பூமியின்கீழ்க் கட்டப்பட்டிருந்த ஒருகட்டிடம்; அது வெகுதூரம்பரவிச் சென்றது. ஹரிஹரனுக்கும் வித்யாரண்யருக்கும் மிக்க ஆச்சரியத்தை யுண்டாக்கிற்று. அன்று மத்தியானம் அவரிடம்வந்து, ஏதோ ஓர் ஆச்சிரியகரமான விஷயத்தைக் காட்டுவதாகச் சொல்லியிருந்தான்; வேறொன்றுஞ் சொல்லவில்லை. இவர்கள் அவனை என்னகேள்விகள்கேட்டும், அதைத் தான் காட்டுவதாகச்

சொன்னானே தவிர வேறொன்றுஞ் சொல்லவில்லை; அவனைப் பார்த்தால் மிகத்தாழ்ந்த ஊழியன்போற் காணப்பட்டாலும், இவர்கள் அவன்பேச்சை யவமதியாமல், அவன் குறிப்பித்திருந்த இடத்திற்கு வந்தார்கள். அவ்விடத்திலிருந்துகொண்டு, அவர்களை மீண்டும் அழைத்துச்சென்றான். அவன் அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்திருந்தபடி, இவர்கள் சிறிதேனும் வாய்திறக்கவில்லை. இவர்களை ஏதோ ஓரிடத்திற் கொண்டுபோய் நிறுத்தினான்; கண்களினின்றுங் கட்டையவிழ்த்தான்.

அந்தோ! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்! சூரியனை நிகர்க்கின்ற காந்திப்பொருள்கள் எத்தனையோ அங்குக் காணப்பட்டன. அவ்விடம் மிகப்பருத்ததோர் அரண்மனைபோலக் காணப்பட்டது. அங்கு உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோர்கள் எல்லோரும், இவ்விருவரும் உள்ளே நுழைந்தவுடன் எழுந்தார்கள்; இவர்களை நமஸ்கரித்தார்கள்; இவர்களை யெல்லோரும் அறிந்தவர்களைப்போலப் பாவித்துக்கொண்டு, எல்லோரும் இவர்களை நெருங்கிநெருங்கிப் பேசினார்கள். எல்லோரும் இவர்கள்முன்னம், மிக்க வணக்கவொடுக்கத்துடன் நடந்துகொண்டார்கள். இவ்விருவர் மனமும், அளவற்ற சந்தோஷத்தையடைந்தன. இவர்களை இவ்வளவு மரியாதையுடன் நடத்துகிறார்களே, இவர்கள் யாவர்? வித்யாரண்யர் அவர்களை வினவத்தொடங்குவார்; உடனே, சந்தோஷமிகுதியால் வாய்திறக்கமுடியாமற் சும்மாவிருந்துவிடுவார்; ஹரிஹரன் அவர்களைக் கூப்பிட்டு விஷயமெல்லாவற்றையும் விசாரித்துக் கொள்ளவேண்டுமென்ற அவாவுடன் வாய்திறப்பான்; அதற்குள், வித்யாரண்யர் என்ன சொல்லுவாரோவெனப் பயந்து, வாயைமூடிக் கொள்ளு

வான். இப்படி இவ்விருவரும், ஒருநாழிகைப்பொழுது வாய் திறவாமலே,இங்கும்அங்கும் அலைந்துகொண்டிருந்தார்கள்.

அச்சமயத்தில் எவனோ ஒருவன், மிக்குயர்ந்த ஆடைகளை அணிந்துகொண்டு, இவர்கள் எதிரில்வந்து நமஸ்கரித்து நின்றான். அவனைப்பார்த்ததும் வித்யாரண்யர் பிரமித்துப்போய் நின்றுவிட்டார். அவன் யாவன்? எவனோ வேலைக்காரன் போன்று இவர்களை யழைத்துவந்தானே அவன் தான். ஸ்வாமி! எங்கள் இடமுழுவதையும் தாங்கள் வந்து பார்க்கவேண்டும்" என்றான்.

"இதோ வருகிறேன் அப்பா" என அவனுக்குச் சொல்லிவிட்டு, ஹரிஹரனை நோக்கி, "ஹரிஹரா! வா" வென்றழைத்தார்.

இவ்விருவரையும் அழைத்துக்கொண்டு அவன் அக்கட்டிட முழுவதையுங் காட்டினான். ஓரிடத்தில், கணக்குவழக்கற்ற கத்திகள் குவிக்கப்பட்டிருந்தான். மற்றோரிடத்திற் கணக்குவழக்கற்ற கேடகங்கள் நிறைத்துவைக்கப்பட்டிருந்தன. இன்னோரிடத்திற் பீரங்கிகள் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. மற்றுமோரிடத்தில், ஒரு பெரிய இருப்புக்கதவை அவன் திறந்தான். மிகவும் விசாலமான நாட்டையுடைய அரசனது பொக்கிஷத்திலுங் கிடைக்கக் கூடாத திரவியம் குவிக்கப்பட்டிருந்தது. எல்லாவற்றையும் வித்யாரண்யர் பார்த்தார்: இவற்றைப் பார்க்கும் பொழுதெல்லாம், இவர்கள் வாய்திறக்கவேயில்லை. அவனும், இவர்கள் கேட்டாலொழிய பதிற்சொல்வதில்லையெனச் சும்மா திறந்து காட்டினானேயொழிய வேறொன்றுஞ் சொல்லவில்லை. இவற்றையெல்லாம் அவன் காட்டினபிறகு,

ஓர் அறையுள் ஒரு புத்தகம்போலொன்று வைக்கப்பட்டிருந்தது; ஓருயர்ந்த மேசைமேல் அப்புத்தகம் இருந்தது. அவர்களை அதனருகில் அழைத்துச்சென்றான்; பக்கம்பக்கமாய் அதைப் புரட்டிக் காட்டினான். அதனுள் என்னவிருந்தது? மூந்நூற்றைம்பது பக்கங்களுக்கு, ஒன்றன்பின் ஒன்றாகப் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. இவற்றையெல்லாம் இவ்விருவரும் பார்த்தார்கள். ஹரிஹரன் சிலபெயர்களைத் தனக்குள் வாசித்துக்கொள்ளும்போழ்து, தனது முகமலர்ச்சியைக்காட்டினான். ஆனால், முடிவில் அஃது என்ன விஷயத்தைச்சார்ந்ததென்று அவர்கள் எளிதில் அறியக்கூடவில்லை. இவ்வளவுநேரஞ் சும்மாவிருந்த வித்யாரண்யர் இப்பொழுது வாய்திறந்து "இப்பெயர்கள் ஏன் இப்புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றன ? என்னகாரணத்தால் எழுதப்பட்டிருக்கின்றன?" என்று கேட்டார்.

"நாங்கள் எல்லோரும் துருக்கருக்கு விரோதிகள்" என்றான் அவன்.

வித்யாரண்யர்முகம் மலர்ந்தது.

"நீங்கள்எல்லோரும் இந்தநாட்டைச்சார்ந்தவர்கள்தானே ?" என்றார் அவர்.

"ஆமாம்."

"என்ன செய்யப்போகிறீர்கள்?"

"நீங்கள் வாள்களைப் பார்க்கவில்லை?"

"பார்த்தேன்."

"பீரங்கிகளைப்பார்க்கவில்லை? "

"பார்த்தேன்."

"மேலே, நான் வேறு ஏதாவது சொல்லவேண்டுமோ?"

"நீங்கள் எதற்காகத் துருக்கனுடன் போர்புரியவேண்டும்?"

"என்ன?"

"உங்கள் அரசன் உங்களவனாயிருந்தாலும் இப்பொழுது துருக்கன் வாங்குகிறபடிதானே வரி வாங்குவான். அவனிடம் வரிகொடுப்பதை இவனிடந்தான் கொடுங்களேன்."

"தாங்களுமா இவ்விதஞ்சொல்லுகிறீர்கள்?" உடனே வித்யாரண்யர் தலைகுனிந்தார். அதையவன் பாராமல், மீண்டும்,

"கொடுங்கோலனாயினும், நம்மவனே நமக் கரசனாயிருக்கவேண்டும்; பிறனுக்குக் கீழ்ப்படிந்திருப்பதிலும் இறக்கலாமென்பது தங்களுக்குத் தெரியாதவிஷயமன்றே!" என மிகக் கோபாக்கிரத்துடன் சொல்லினான்.

"நீசொல்லுவது மிகவுஞ் சரிதான்."

அவன் உடனே வித்யாரண்யரைவிழுந்து நமஸ்கரித்துவிட்டு, "தேவ! நான் ஏதாவது கடும்பேச்சுக்கள் பேசியிருந்தால், மன்னித்தருளவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு, அவரது இருதாளையும், தனதுகையாற் பற்றிக்கொண்டான். "அப்பா! பிழையொன்றும், நீ செய்யவில்லை. ஆகையால் எழுந்திரு" என்றார்.

"தேவனே! நாங்கள் சீக்கிரத்தில் துருக்கனோடு போர்புரிவதாக உத்தேசித்திருக்கிறோம்" என்றான்.

"அப்படியா!"

"ஆமாம். ஒரு விண்ணப்பம்—"

"என்ன?"

இச்சமயத்தில் இவர்களையழைத்துக்கொண்டு திரும்பவும் சபாமண்டபம்போற்றோன்றிய வோரிடத்திற்கு வந்து சேர்ந்தான். அங்கு அவர்கள்வந்ததும், எல்லாரும் பேச்சைநிறுத்திவிட்டு இவர்களையே உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தார்கள்; எல்லோரும் எழுந்து நின்றார்கள். இவர்கள் திரும்பிவந்தபொழுது, முன் அவ்விடத்திலில்லாத ஒரு சிங்காதனம் ஒன்று சபைமத்தியிற் போடப்பட்டிருந்தது. சிங்காதனத்தின்பக்கத்தில், இவர்களை யழைத்துச்சென்றவன் போய் நின்றுகொண்டான்; பின் வருமாறு பேசினான்:—

"நண்பர்களே! நமது விதிவசத்தால், நமதுநாட்டைத் துருக்கன் கைப்பற்றிய அன்றுமுதல், எவ்விதத்தாலாவது கூடிய சீக்கிரத்தில் துருக்கனது ஆளுகையினின்று மீண்டும் நமது நாட்டானொருவனதாளுகைக் குட்பட்டிருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், இதுவரையில் நாம் உழைத்து வந்தோம். நமது குழாத்திலுள்ளோரில் அநேகர் போர் வீரர்கள்; திரவியமோ, நம்மிடம் ஏராளமாயிருக்கின்றது; யுத்தத்துக்குவேண்டிய ஆயுதங்களோ, நம்மிடத்தில் வேண்டிய அளவு இருக்கின்றன. ஆனால் இவ்வளவுநாளாய் என்ன குறைவிருந்தது? நமக்குத்தலைவன் ஒருவனில்லாமல், நமது திரவியம் முதலானவையெல்லாம், உயிரில்லா உடல்போலிருந்தன. நம்மால் ஒன்றுஞ்செய்யமுடியவில்லை.

"நண்பர்காள்! இப்பொழுதோ? அசைவற்ற உடலுள் உயிர்புகுந்தாற்போல நமது குழாத்திற்குள் இம்மகான் வந்திருக்கின்றார். இனிமேல் நமக்கொன்றுங் குறைவில்லை" என்று சபையோர்களைநோக்கிச் சொல்லிவிட்டு, வயதுமுதிர்ந்த சந்நியாசியைநோக்கித் "தேவே! இச்சிங்காதனத்தில் வீற்றிருக்கவேண்டும்" என்றான்.

"ஹரிஹரா! சிங்காதனத்திலேறு" என்றார் வித்யாரண்ய முனிவர்.

'ஹரிஹரா' என்று வித்யாரண்யர் கூப்பிட்டதும், எல்லாக்கண்களும் ஹரிஹரன்மேற்றிரும்பின. தனது குருவினது சொல்லைத் தட்டலாகாதென்று, அவர் சொல்லியபடி உடனே சிங்காதனத்தின்மேல் ஏறினான். அப்பொழுது எல்லோரு மொருங்கே, ஆனந்தக்கூச்சலிட்டு, தங்களுடைய சந்தோஷத்தை வெளியிட்டார்கள். எல்லோரும் கீழேவிழுந்து பணிந்தார்கள். வித்யாரண்யர் தான் அவனுக்கு மந்திரியாயிருப்பேனென்று சொல்லிக்கொண்டார். உடனே இவர்களை யழைத்துவந்தவன், வித்யாரண்யரருகேவந்து, பின்வருமாறு ஹரிஹரன் சில சத்தியங்கள் செய்யவேண்டுமென வேண்டினான். வித்யாரண்யர் ஹரிஹரன் அதற்கிசைவானெனச்சொன்னார். அப்பொழுது ஹரிஹரன் இம்மூன்று சத்தியங்கள் செய்தான்.

"எனது தெய்வமறிய, உங்களை, எனது மக்களாக நினைத்துப் பாதுகாப்பேன்—

"எனது தெய்வமறிய, இவ்விராஜ்ஜியத்தை, நீங்கள் வைத்தாளச்சொல்லியபடி, ஆளுவேன்—

"எனது தெய்வமறிய, நமது தெய்வத்தை யெல்லாம், பிறன் கையிலகப்படாதபடி, உங்கள் உதவியினாற் பாதுகாப்பேன்."

இவ்வாறு இம்மூன்று வாக்குத்தத்தங்களையும், ஹரிஹர மஹாராஜா கொடுத்தவுடன், வித்யாரண்யர் கையசைத்து எல்லோரையும் உட்கார்த்தினார். ஹரிஹரனும், சிங்காதனத்தி லுட்கார்ந்தான். உடனே வித்யாரண்யர், யாவர் மனத்தையுங் கவரும்படியான ஓர்உபந்யாசம், பின்வருமாறு செய்தார்:—

"நண்பர்காள்! இவ்வளவு நாளாய் எனக்குக் கடவுள் அளித்திருந்த சன்மம், இன்று தான் கடைத்தேறிற்று. இதுவரையில் நான் எனது நாட்டிலிருந்துகொண்டு வீணுக் குழைத்தேன், விழலுக்கிறைத்தேன். உங்களைப்போன்ற புண்ணியாத்மாக்களுக்கு உழைத்திருப்பேனாகில், எவ்வளவோ செய்திருக்கலாம். உங்களுடைய ஹரிஹரரால் எனது உயிர் பிழைத்திருக்கின்றது. இல்லாவிடில், துருக்கன் என்னை வாளுக்கிரையாக்கி அநேகமாதங்களாயிருக்கும். உங்கள் ஹரிஹரர் தமது நாட்டுஸ்திதியை எனக்கு வெளியிட்டார். நான் உடனே, உமதுநாட்டிலேயே போயுழைத்தால் நலங்கிடைக்குமெனச் சொன்னேன்; அவரும் என்சொல்லுக்கிணங்கினார்; கடைசியாய், நாங்கள் இங்குப்புறப்பட்டு வந்தோம். நான் முன்னமே துறவிதான்; இவர்களையுந் துறவியாடைகளை யணிந்துகொள்ளச் சொன்னேன். இவரும் இவரது சகோதரராகிய புக்கரும் சந்நியாசி யாடைகளையணிந்து கொண்டிருப்பதனால், அவர்கள் இன்னோர்களென்று ஒருவரும் அறிந்து கொள்ளவில்லை.

நண்பர்காள்! நீங்கள், உங்களுடைய மதத்தின்பேரிலும், நாட்டின் பேரிலும், இவ்வளவு அன்பு வைத்திருக்கிறீர்களேயென்று நான் மிகவும் மனங்களிக்கின்றேன். ஐயன்மீர்! இராமனாண்டாலென்ன, இராவணனாண்டாலென்ன வென்றிருக்கலாகாது. இராமனாண்டால், பிரஜைகளுக்குச் சுகந்தான்; இராவணன் ஆண்டால், பிரஜைகளுக்குத் துக்கந்தான். அம்மாதிரி நம்மவனே நம்மையாள்வானானால், நமக்குச் சுகந்தான்; பிறன் ஆண்டால் நமக்குவிளைவது துக்கந்தான். இருவரும்வரிவாங்குகிறார்களே, ஒருவரையெதிர்த்து மற்றொருவருடன் போர்புரிவதில் என்னலாபமென்று கேட்

பிராகில், அநேகமாய் நம்மவன் அதிகவரிவாங்கமாட்டான்; அப்படிவாங்கினாலும், அதைத்திருப்பி உங்களுக்குக்கொடாமல் வேறுயாரிடங் கொடுப்பான்? மேலும், எவ்வளவு கொடுங் கோலனாயிருந்தாலும், நம்மவனுக்குக் கீழ்ப்படிந்திருப்பதனால் நமதுகௌரவத்திற்குக் குறைவொன்றும் வாராது; பிறனுக்குத் தலைகுனிந்தால் அதைவிடப்பெரிய அவமானமொன்றுமில்லை. யாரேனும் பிறனொருவன் செங்கோலனாயிருப்பான்; அவன்குழாத்திலுள்ள மற்றைய எல்லோரும் உங்கள்விஷயத்திற் கொடுங்கோலர்களாகவேயிருப்பார்கள். ஆகையின் எப்படியாவது, பிறனைவெருட்டியோட்டி, நமது நாட்டை நாமே வைத்துக்கொள்ளுவோமென்று நீங்கள் எண்ணிய எண்ணம், வெகுநன்றாயிருக்கின்றது. இதையும், பார்க்கக் கொடுத்துவைத்திருந்தேனே யென்று நினைக்க நினைக்க எனக்கும் ஆனந்தம் பொங்குகின்றது.

"ஐயன்மீர்! நன்றாய் யோசிக்கத்தக்கதாய் ஒருவிஷயமிருக்கின்றது. இந்நாட்டை நீங்கள் ஹரிஹரருடைய சுகத்துக்காகப்பிடித்துக் கொடுக்கப்போகிறதில்லை, உங்களுடைய சுகத்திற்காகவே பிடித்துக்கொடுக்கப் போகிறீர்கள். இந்நாட்டிற்கு ஹரிஹரர் எவ்வளவு அவசியமாயிருக்க வேண்டுமோ, அம்மாதிரியே நீங்கள் ஒவ்வொருவரும் இருக்கவேண்டுவது, இந்நாட்டினது நலத்திற்காகவே அவசியம். ஒவ்வொருவரும் பொதுநலத்திற்காக உழைக்கின்றீர்கள்; இனி உயிரையுங் கொடுக்கப்போகின்றீர்கள். ஆகையின், இராஜ்ஜியம் உங்கள் எல்லோருக்கும் பொதுவானதோர் ஆஸ்தி; அவ்வாஸ்தியை நீங்கள் பங்குபோட்டுக் கொள்ளமுடியாது. உங்களுடைய சந்ததிக்கெல்லாம், நீங்கள் இதைவிட்டுவிட்டுப்போகவேமேயொழிய, வேறே தனித்தனியாய், நீங்களி

தையொன்றுஞ் செய்யமுடியாது. ஆகையின், உங்கள் ஆஸ்திக்கு உங்களைத்தவிர வேறுயார் பாடுபடுவார்கள்? அப்படியிருக்க, இராமனுண்டாலென்ன, இராவணனுண்டாலென்ன என்று சொல்லுவதுசரியா? முன்காலத்திலிருந்தநாடுகளைப் போல, இந்நாடு அரசனது ஆஸ்தியன்று; இந்நாட்டில், அரசனது பிரஜைகள் எல்லாருக்கும் சமமான பங்குண்டு. இப்பொழுது உங்களதுநாடு துருக்கனிடமிருக்கிறபடியால், நீங்கள் அதை எப்படியாவது கைப்பற்றிக்கொள்ளவேண்டியது அவசியம்; அதற்காக நாம் தீர்க்காலோசனை செய்வோம்.

"இவ்வாஸ்தியானது அவர்கள் காலத்திற்குப் பிறகு, அவரவர்கள் சந்ததிக்குப்போய்ச் சேருகின்றது. ஐயன்மீர்! நீங்கள் அரசை ஹரிஹரருக்குப் பிற்காலம் அவருக்குப் புத்திரனிருந்தால், புத்திரனுக்குக் கொடுக்கவேண்டும்; இல்லாவிடில் அவர் சகோதரருக்குக் கொடுக்கவேண்டும்; அரசன் உங்களுக்கு வாக்குத்தத்தஞ்செய்தபடி நடந்துகொள்ளும் வரையில், நீங்கள் அவனை யொன்றுஞ் செய்யமுடியாது; அரசன் எப்பொழுது தான் செய்திருக்குஞ் சத்தியத்திற்கு விரோதமாய் நடக்கின்றானோ அப்பொழுது நீங்கள் அவனை 'நீசெய்வதுபிழை' யெனச்சொல்லி அவனைச் சரியாயிருக்கச் சொல்லலாம். ஐயன்மீர்! அரசன்மாத்திரமா உங்களையாளப் போகின்றான்? அன்று; நீங்களே உங்களை யாண்டுகொள்ளப் போகின்றீர்கள். உங்களுடைய பிரதிநிதிகள் ஆலோசனை சபையிலிருப்பார்கள். அரசன், அவர்கள் எம்முடிவிற்கு வருவார்களோ அப்படியே செய்வான். இப்படி நமதரசன் இருக்கும்பொழுது நடக்கும். டொக்லாக் உங்களுக்கு என்ன கொடுப்பான்? உங்களிடமிருந்து வாங்குவான். நமது ஹரிஹரர் ஆளுகையில், உங்களுக்கு ராஜாங்கத்தார் ஏதாவ

து வரிபோட்டால் ஏன் வரிபோடுகிறீர்களென்று கேட்க லாம். இப்பொழுதிருக்கிறபடி, நீங்கள் சும்மா வரியைக் கொடுக்கவேண்டியதேதவிர, நீங்கள் ஒன்றுங் கேட்கலா காது. நல்லசமயத்திற் பிறந்தோர்க்கு இவ்வித எண்ண மிருக்கவேண்டியதுதான். நீங்கள் உயர்ந்தோர்கள்; ஆகை யின் இவ்விதஞ்செய்யத் துணிந்தீர்.

"நண்பர்காள்! நீங்கள்வைத்திருக்கும் புத்தகத்தின்பக் கங்களைப் புரட்டிப்பார்த்தபொழுது, எனக்கு அதிற் கை யொப்பமிட்டவர்கள் ஆயிரக்கணக்காயிருந்தும், வெகுநா ளாய் இவ்விரகசியச்சங்கம் ஏற்பட்டிருந்தும், இவ்வளவு எல் லோரும் மனமொத்து, பொதுநன்மைக்காக நீங்களெல் லோரும் உழைக்கின்றீர்களேயென்று எனக்குப்பொங்கிய சந்தோஷத்துக்களவில்லை. எப்பொழுதும் ஒத்திருந்தாற் பி ழைக்கலாம்; ஒருவருக்கொருவர்பொறுமைப்பட்டு,ஒருவரு டன்சேராமலிருந்தால் அநர்த்தம்வந்துநேரிடும். ஐயன்மீர்! வாரங்கல் ஒற்றுமையில்லாததனாலேயேதான் துருக்கனுக்கு இரையாயிற்று. துருக்கனும், நமதுஅரசர்கள் ஒருங்கே ஒன் றுசேராததனாலேயேதான் வெற்றியடைந்து வருகின்றான். ஒருபேச்சைப் பேசுவோரும், ஒருகடவுளை வழிபடுவோரும், ஒருநாட்டிலிருப்போரும் ஒருவருக்கொருவர் பொறுமைப் பட்டாலென்னலாபம்? நீங்களே ஒருவருக்கொருவர் விரோ திகளாயிருந்தால், துருக்கன்என்ன அநியாயஞ்செய்தாலும், தன்னைக் கேட்போரில்லையென்னும் தைரியத்தால், மேலும் மேலும் அநியாயஞ்செய்ய ஆரம்பிப்பான். ஐயன்மீர்! உங்க ளிடம் அத்துர்க்குணமில்லை; நீங்கள் கண்டிதமாய் வெற்றி யடைவீர்கள். ஐயன்மீர்! கிருஷ்ணபகவான்,

'பரித்ராணாயஸாதூனாம்விநாசாயசதுஷ்க்ருதாம்

தர்மஸம்ஸ்தாபனார்த்தாயஸம்பவாமியுகேயுகே'
என்று செப்பியிருக்கின்றார். அவர்வார்த்தைக்குப் பழுது வாராமல் உங்களுக்கு வெற்றியைத்தந்து உங்களையுங் காப்பாற்றுவார்.

"நண்பர்காள்! நாம் செய்யும் யத்தனஞ் சிறிதும் தவறிப்போகக்கூடாது. ஆகையால், நாம் எல்லாவற்றையுஞ் சந்நத்தமாய் வைத்துக்கொண்டு, எல்லாம் சரியாயிருக்கின்றனவாவென்று ஒருதடவைக்கு மூன்றுதடவையாய்ப் பார்த்துக்கொண்டு, நாம் செய்யுங் காரியத்தைச் செய்யத் தொடங்க வேண்டும். துருக்கரைத் திடீரெனக் கவர்ந்து கொள்ளவேண்டும். இப்பொழுது டொக்லாக்குக்கு டெல்லியிற் படையில்லை; நாம் இவர்களைக் கிளம்ப முடியாமற் செய்துவிடுவோமாகிற் போதும். டொக்லாக்குக்கே இப்பொழுது நம்மை யெதிர்த்துவரப் படையில்லை; வேண்டிய அளவு திரவியமில்லை; அவனது சேனாதிபதியை நாமுஞ் சிறையிலடைத்து விடுவோம். எல்லாவற்றிற்கும் கடவுள் அநுக்கிரகம்வேண்டும். ஐயோ! நமது குழாத்துக்கு வெற்றியளிக்க வேண்டுவதற்காகப் பகவானை வேண்டுவோம்" எனச்சொல்லி முடித்ததும், எல்லோரும் எழுந்தார்கள். உடனே வித்யாரண்யர் ஸ்ரீராமபகவானைப்பின்வருமாறு துதி செய்தார்:—

"சுத்தப் ப்ரஹ்ம பராத்பரராம்
காலாத் மகபர மேச்வரராம்
சேஷ தல்பசுக நித்ரிதராம்
ப்ரஹ்மாத் யமரப் ப்ரார்த்திதராம்
சண்ட கிரணகுல மண்டிதராம்
ஸ்ரீமத் தசரத நந்தனராம்

கௌசல் யாசுத வர்த்தனராம்
மாரீ சாதி நிபாதகராம்
* * * *"

இவ்விதம் பகவானைத் துதிசெய்துவிட்டு, வித்யாரண்ய ருட்கார்ந்தார். சற்றுநேரத்துக்கெல்லாம், முன்வந்தவழியாகவே இவ்விருவரையும் வெளியேகொண்டுவந்து விட்டார்கள். இப்பொழுதுமாத்திரங் கண்ணைக்கட்டவில்லை; இவர்கள் வெளியே வந்தசமயத்தில், அதேவழியாய் நரசிங்கனும், அச்சிறுவனும் உள்ளேநுழைந்தார்கள். மிகவும் இருட்டாயிருந்ததனால், ஒருவரையொருவர் இன்னாரென்றறிந்துகொள்ளமுடியவில்லை. இவ்விருவரும் உள்ளேநுழைந்ததும், ஹரிஹரனைப்பற்றி யாரோ இருவர்பேசிக்கொண்டிருந்தார்கள். இவ்விருவரும் அங்கேபோய்நின்றுகொண்டிருந்தபொழுது,

"யார் ஐயா ஹரிஹரர்?" என்றான் நரசிங்கன்.

"நம்மை யினியாளப்போகிறவர்."

"யார் அவர்?"

"முன்னம் இந்த நாட்டுச் சேனாதிபதியா யிருந்தாரே அவர்."

"நீர் அவரைப்பார்த்தீரோ?" என்றான் அச்சிறுவன்.

"இப்பொழுதுதானே வெளியேபோயினர்."

"இப்பொழுதா?"

"ஆமாம்."

"நரசிங்கா! அவரைப் போய்ப்பிடிப்போம்" என்றான் அச்சிறுவன்.

"ஓடிவா கிருஷ்ணா!" என்று சொல்லிக்கொண்டே, நரசிங்கன் அச்சிறுவனுடன்கூட ஓடிவர, இருவருமாக அவ்விரகசிய சபையினின்றும் வெளியே ஓடிவந்தார்கள்.

---

## அத்தியாயம். 9.

## எல்லாம் இன்பம்.

——:o:——

வித்யாரண்யர் உபந்யாசஞ் செய்த எட்டாவதுநாளில், அந்த ஊருக்கருகில் ஏதோ ஓர் உத்ஸவம் நடந்தது. அவ்வியாஜமாக இதுவரையிற் காணப்படாத ஒரு பெருங் கூட்டம் ஆனேகுந்தியின் தெருக்களிற் காணப்பட்டன. பகவான் எழுந்தருளி நகரப்பிரதக்ஷணமாவதற்குப் பன்னிரண்டு நாழிகைக்கு மேல் ஆய்விட்டது. பகவான் கோயிற்குட் புகுந்ததும், அப்பெருங்கூட்டம் சிறிது சிறிதாய்க் கலைய ஆரம்பித்தது. அநேகர் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். வேறு சிலரோ உடைகள் மாற்றிக்கொண்டு கூட்டங்கூட்டமாகச், சிலர் ராஜபிரதிநிதியிருக்கும் பக்கத்திலும், சிலர் கோட்டைக்கருகில் வரிசைவரிசையாகக் கட்டிடங்களில் தூங்கிக் கொண்டிருக்கும்மகம்மதியப் படையிருப்பிடத்தை நோக்கியுஞ் சென்றார்கள். அவர்கள், பிறர் சிறிதும்அறியாதபடி சென்றார்கள்; கொஞ்சங்கொஞ்சமாய் அவர்களதுபடை மிகுந்தது; ஆகவே, சிறிது நேரத்துக்கெல்லாம், இவ்விரண்டிடத்தையும் இவர்கள் போய்ச் சூழ்ந்து கொண்டார்கள். துருக்கன்படைக் காவலாளர்கள், அன்று ஊரில் உத்ஸவம் நடந்தபடியால் இவர்கள் வருவதைப்பற்றிச் சந்தேகிக்கவில்லை. ஆனால் ஒரு பக்கமுழுவதும் இவர்கள் வந்து சூழ்ந்துகொண்டவுடன் காவலாளர்களுக்கு இவர்கள்மேற் சந்தேகம் ஜனித்தது; உடனே படைவீரர்களையெல்லாம் எழுப்பினார்கள். இவர்களை எழுப்புவதற்கு முன், ஆனேகுந்தி நகரத்துப்படை, துருக்கர்களை முற்றிலுஞ் சூழ்ந்துகொண்

டது. உடனே திடீர் திடீரெனப் பீரங்கியினின்றும் குண்டு கள் வெடித்தோடுஞ் சப்தங் கேட்டது.

துருக்கனுடைய படைவீரர்கள், இவ்விதம் திடீரெனக் கவர்ந்துகொள்ளப் படமாட்டார்களென்றநிச்சயத்தால், சிறி துங் கவலையற்றுத் தூங்கிக்கொண்டிருந்தார்கள். உடனே அவர்களும் யுத்தத்துக்குத் தங்களை வெகுசீக்கிரத்திற் சித் தஞ்செய்துகொண்டார்கள். அப்புறம் பகல் பதினைந்துநாழி கைவரைக்கும் யுத்தம்நடந்தது. துருக்கர்கள் யுத்தஞ்செய் யமுடியாமல் திடுக்கிட்டுப்போய், ஹிந்துவீரர்கள் வாளுக்கு இரையாய்க்கொண்டிருந்தார்கள். ஹரிஹரன் ராஜப்பிரதிநிதி யிருக்குமிடத்தை வளைத்துக்கொண்டிருந்த படைக்கதிபதி யாயிருந்தான். அச்சமயத்தில் மாலிக்நாயபைச் சிறையி லடைத்துவிட்டு, ஹரிஹரன் கோட்டைமதிலண்டை தான் வந்ததும், துருக்கர்கள் இருந்த நிலையைப்பார்த்துவிட்டு, "நீங்கள் உங்களுடைய ஆயுதங்களையெல்லாம் எங்களிடம் ஒப்பித்துவிட்டாற் சும்மாவிருந்துவிடுவோம்" எனத் துரு க்கர்களுக்குச் சொல்லியனுப்பினன். துருக்கர்களும் அதற் கிசைய, ஹரிஹரன் அவர்களுடைய ஆயுதத்தைவாங்கிக்கொ ண்டு, அவர்களைச் சிறையிலடைக்கச் சொன்னன். ஹரிஹர னது சைனியம், துருக்கர்களையெல்லாங் கைதிகளாக்கிவிட் டது. உடனே ஹிந்துவீரர்களைநோக்கித் துருக்கர்களையொ ன்றுஞ் செய்யலாகாதெனக் கட்டளையிட்டான். அவர்களும் அக்கட்டளைக்கிசைந்து, கைதிகளைத் தகுந்தமரியாதையுடன் அழைத்துப்போய்ச் சிறையிலடைத்துவிட்டார்கள். உடனே நகரத்திலுள்ளவெல்லோரும், ஹரிஹரன் அவர்களைக் கைதி யாய்ப்பிடித்துக் கொண்டுவந்தபொழுது "ஜெய! ஜெய! ஹரி ஹர மஹராஜ்!" என்று ஆனந்தம் பொங்கிக் கூவினர்கள்.

ஊரெல்லாங் குதூகலமாயிருந்தது; தெருவெல்லாம் புஷ்ப மாரிபொழிந்தன; எவ்விடத்திலுஞ், சுகப்படாதாரில்லை.

நரசிங்கனும் ஷெய்க்கும் வெகுநேரம் யுத்தஞ்செய்து களைத்திருந்தார்கள். மிகக்களைப்புற்றிருந்தும், எப்படியாவது ஹரிஹரனைக்கண்டு பேசிவிட்டுத்தான் சாப்பிடப்போவதென்ற உறுதியுடன் இருவரும் குதிரைமேலேறிக்கொண்டு, படைகளையெல்லாம் விலக்கிக்கொண்டு வெகுநேரஞ் சிரமப்பட்டு ஹரிஹரனண்டை வந்துசேர்ந்தார்கள். அங்கு வந்ததும் இருவரும் அவன் காலில்விழுந்து, அவன்பாதத்தை முத்தமிட்டு,

"மஹாராஜ்! தாங்கள்தாமோ, ஆச்சிரமத்திலிருந்த சந்நியாசிகளிலொருவர்?" என்றான் நரசிங்கன்.

"ஆமாம்."

"மற்றிருவரும் இங்கே யிருக்கிறார்களோ?"

"இதோ ஒருவர் நிற்கின்றார், பார்."

திரும்பிப்பார்த்தால் புக்கன் நிற்கின்றான்.

மீண்டும் ஹரிஹரன், "மற்றொருவர் எங்களுடைய குரு" என்றான்.

"மஹாராஜ்! தங்களைச் சிறிதும் எனக்கு அறிந்துகொள்ள முடியவில்லையே."

"ஆமாம்" என்று ஹரிஹரன் சிரித்தான்.

"தாங்கள் என்னை அறிந்து கொண்டீர்களோ?"

"அறிந்து கொண்டேன்."

"என்னையேன் தங்களை யறிந்துகொள்ளாதபடி வைத்தீர்கள்?"

"நரசிங்கா! எல்லாஞ்சரியான சமயத்திற்செய்துகொள்ளவேண்டும். நான் இப்பொழுதே என்னை வெளியிட்டுக் கொள்ளலாகாது."

"அப்படியா?"

"மகம்மது!"

"மஹராஜ்."

"என்னிடம் உனக்கிருக்கும் அன்பைப்பற்றி உன்னை மிகவும் மெய்ச்சுகின்றேன்."

இச்சமயத்தில் வித்யாரண்யர் வந்துசேர்ந்தார். அவர் வந்ததும் எல்லாரும் அவரை நமஸ்கரித்தார்கள். அங்கு வந்து நின்றுகொண்டு, "நண்பர்காள்! பகவான் நமக்கு அநுக்கிரகஞ்செய்துவிட்டார்"என்றார். உடனே ஹரிஹரன் அவர் பாதத்தில்விழுந்து, "ஆர்ய! இவ்விராஜ்ஜியம் உங்களது; ஆகையால் எடுத்துக்கொள்ளவேண்டும்" என்றான்.

"ஹரிஹரா! நீ கொடுத்ததையான் அங்கீகாரஞ்செய்து கொண்டேன். அப்பா! உன்னிடம் வணக்கமும், ஒடுக்கமும், தெய்வபக்தியும் மிகுந்திருக்கின்றன. ஆகையாற்றான் கடவுள் உன்பக்கத்துக்கு வெற்றியைக் கொடுத்தார். உன்னுடைய குணாதிசயங்களை மிகவுமெய்ச்சினேன். ஆனால் நீஉலகத்தைப் பாதுகாத்து, அதைவழிப்படுத்துவதற்குப் பிறந்திருக்கின்றாய். நான் அன்றுசொன்னபடி இவ்வுலகமெல்லாம் பகவானது;பகவான் இவ்வுலகத்தைத் தமதுகுழந்தைகளாகிய பிரஜைகளிடங்கொடுத்தார். அவர்களெல்லாம் அதைப் பாதுகாத்துத் தங்களைச் சுகப்படுத்துவதற்குத்தகுந்த வன்மையையுடையவன்உன்னைத்தவிரஒருவருமில்லையென்றுஉன்னிடம் நாட்டை யொப்பித்தார்கள். அவ்விதம் வன்மையற்ற எனக்கு நீநாட்டைக்கொடுக்கின்றாய். ஹரிஹரா! உனது வணக்கத்தை எவ்வாறுஎடுத்துரைப்பேன்!நீடூழிகாலத்தும் உன்னைக் கொண்டாடாதார், ஒருவருமிருக்கவே மாட்டார்கள். சீலம், ஒழுக்கம், வீரம், தெய்வபக்திமுதலியவற்றுடன்

வணக்கமும் சேர்த்துத்திரட்டிய அமுதமே! நீகொடுத்ததை யான் உனக்கேதிருப்பிக்கொடுக்கிறேன். நான் எப்படிஅதை அங்கிகாரஞ்செய்துகொண்டேனோ,அப்படியே உன்னுடைய குணத்துக் கிசைந்தவாறு நான்கொடுப்பதை நீ அங்கீகரித்துக்கொள். இந்நாட்டை நீ, பகவான் உன்னிடம் ஒப்பித்ததாக வைத்துக்கொண்டு, அதைச்சுகமாய் ஆண்டுவருவாய். யானோ உன்னுடனே கூடவிருந்து, எவ்விதத்திலும், எக்காலத்திலும் என்றனாலென்ன முடியுமோ அதைச் செய்யத்தவறேன். ஹரிஹரா! உனக்கிசைந்தவாறு ஒரு சகோதரன் அகப்பட்டான். புக்கா! உனக்கொன்றுங் குறைவில்லை. ஹரிஹரனுக்கு எவ்விதத்திலும் நீதான் அடுத்தோன். உனது மூத்தானோடு கூடவிருந்து நீயும் நாட்டைக் காப்பாற்றுவாய்" என்றுசொல்லி வித்யாரண்யர் முடித்தார்.

இச்சமயத்தில் ஒரு குதிரைமேல் ஏறிக்கொண்டு ஒரு சிறுவன் வித்யாரண்யர் எதிரேவந்துநின்று வணங்கினன். வித்யாரண்யர் அச்சிறுவனை ஆசீர்வதித்துவிட்டு,

"சிறுவ! நீயும் போரிலிருந்தாயோ?"

"இருந்தேன்" என்றான் அச்சிறுவன்.

உடனே அவன் ஹரிஹரன்காலில்விழுந்து, "ஐயா! உங்களை யான் இதுவரையில் அறிந்துகொள்ள முடியவில்லையே! என்னைத் தாங்கள் அறிந்துகொண்டீர்களோ?" என்றான்.

"இல்லை" என்றான் ஹரிஹரன்.

அச்சமயத்தில் நரசிங்கன், "மஹராஜ்! தங்களைத் தேடிக்கொண்டு, இச்சிறுவன் காட்டினுள் வந்து ஒரு கற்பாறைமேற் படுத்துறங்கிக்கொண்டிருந்தான். நான் அவனது ஈன தசையைக்கண்டு பரிதவித்து, அவனைக் காப்பாற்றும்படியான பாக்கியத்தை யடைந்தேன். அச்சமயத்

தில் ஷெய்க்கையுங் கண்டேன். அப்பொழுதுமுதல் நாங்கள் மூவரும் பிரிந்திருப்பதில்லை. இப்பொழுது எல்லோரும் உங்களைச் சேர்ந்தாற்போற் சரணடைந்தோம்.”

உடனே புக்கன் “அண்ணா! இச்சிறுவனைத்தான் நாம் பார்த்தோம்” என்றான்.

அதற்குள் அச்சிறுவன், “தங்கள் மனையாள் எங்கே தெரியுமா?” என்றான்.

ஹரிஹரன் மிகக் கண்ணீர் விட்டழுது “அவள் இறந்தாளாம். பாவி, நான் பிழைத்திருக்கின்றேன் என்று செய்தி சொல்லி யனுப்பாதிருந்ததனால், எங்கேயோ ஓடியிறந்தாளாம்” என்றான்.

“அவள் பிழைத்திருக்கின்றாள் மஹாராஜ்.”

“எங்கே?”

“இதோ அழைத்துவருகிறேன்” என்று சொல்லி அம்மைதானத்துக்குக் கொஞ்சத்தூரத்திலிருந்த ஒரு மனைக்குட்புகுந்தான். திரும்பிவரும்பொழுது ஒரு பெணமாத்திரம் வந்தாள். அவளைக் கொஞ்சதூரத்திற் கண்டவுடன்,

“விஜயே!” என்று கூப்பிட்டு, ஹரிஹரன் ஆனந்தக்கண்ணீர்விட்டான். எல்லாக்கண்களும் விஜயை வரும்பக்கத்தில் திரும்பின. எல்லாரும் மிகவும் ஆச்சரிய மடைந்தார்கள். முகம் சிறுவனது முகம்போலக் காணப்பட்டது. அநேகருக்கு இன்னுஞ் சந்தேகமாயிருந்தது. இதற்குள், விஜயை ஹரிஹரனண்டை வந்து சேர்ந்தாள்.

“விஜயே! நீதானோ அச்சிறுவன்?” என்றான் ஹரிஹரன்.

“ஆமாம் நாதா!”

உடனே நரசிங்கனும் ஷெய்க்கும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவரும் சற்றுநேரம் பிரமித்து நின்றார்கள்.

விஜயை திரும்பவும்,

"நாதா! இவ்விருவரும் என்னைக் காப்பாற்றினார்கள்; இவர்களுக்கு நான் என்னகைம்மாறு செய்வேன்?" என்றாள்.

"அம்மணி! தங்களைச் சாக்கிரதையாய் எங்கள் எஜமானரிடம் ஒப்பிக்கும்படியாய் நேரிட்டபாக்கியத்தை என்னென்றுரைப்பேன் என்னபுண்ணியம் செய்தோமோ? எங்கள் ஜன்மம் இன்றுதான் கடைத்தேறிற்று" என்றான் நரசிங்கன்.

"அம்மணி! தாசன்" என்று கூய்க்கும், அவளைத்தரையில் விழுந்து பணிந்தான்.

இவ்வாறு இவர்கள் குதூகலத்துடனிருப்பதைப் பார்த்து எல்லாருஞ் சந்தோஷித்தார்கள். விஜயையது அதிசயங்களை ஒவ்வொருவருஞ் சொல்லிச்சொல்லி வியந்தார்கள். இச்சமயத்தில் ஹரிஹரன் விஜயையையெடுத்துக் கட்டியணைத்து முத்தமிட்டான். அப்புறம்,

"விஜயே! இம்முனிவர் எனது குரு, இவரைப்பணி" யென்றான்.

விஜயை உடனே கீழேவிழுந்து வித்யாரண்யரைப்பணிந்தாள். வித்யாரண்யர் அவளை ஆசிர்வதித்தார். அப்புறம் எல்லோருமாகத் துருக்கன் பிரதிநிதி தனக்காகக் கட்டிக்கொண்ட அரண்மனைக்குட் சென்றார்கள். உட்சென்று, அங்கே துருக்கனுக்காகப் போட்டிருந்த சிங்காதனத்தில் ஹரிஹரனையும் விஜயையையும் உட்கார்த்தி ஹரிஹரனுக்கு மகுடஞ்சூட்டினார்கள். வேதகோஷம், வாத்யகோஷம் முதலியவையெல்லாம் ஆகாயத்திற்கே இன்னிசையைக் கொடுத்தன; அக்கல்யாணத்தை நாட்டிலுள்ளோரெல்லாங்கண்

குளிரப் பார்த்தார்கள்; ஊர்முழுவதும் பொன்மாரிபொழிந்து. வித்யாரண்யர்தாம் சகலத்தையும் நடத்திவைத்தார். அவ்விருவருக்கும் அம்முகூர்த்தத்திலேயே விவாகம் நடந்தது. நரசிங்கனுக்கும் ஷெய்க்ருக்கும் உண்டாகிய ஆனந்தத்தை ஒருவராலும் எடுத்துரைக்கமுடியாது. காலையில் இருந்தநிலைக்கு நேர்விரோதமான நிலையில் அந்நகரமிருந்தது. இரகசியச் சபையார் எல்லோரும்வந்து சபையை யலங்கரித்தார்கள்; எல்லோருக்கும் தானதர்மம் செய்யும்படி வித்யாரண்யர் உத்தரவுசெய்தார். துருக்கன், ஜனங்களை வதைத்துச்சேர்த்து வைத்திருந்தபணமும், ஜனங்களினின்று கொள்ளையடித்திருந்த பணமும், இப்பொழுது ஏழைகளுக்குக் கொடுக்கஉபயோகப்பட்டது. சிறையிலடைபட்டிருந்த எல்லோரையும் அவரவர்கள் இடத்திற்குப்போகச் சொல்லிவிட்டார்கள். கோயில்களுக்கெல்லாம் புதிதாய் அநேகதர்மம் வித்யாரண்யர் செய்தார்; அநேக இடங்களிற் புதிதாய்க் கோயிற்கட்டுவித்தார்; இம்மாதிரி துருக்கனிடமிருந்து நாட்டை அவர்கள் கைப்பற்றிக்கொண்டு இன்புற்றிருந்தார்கள்.

---

## அத்தியாயம் 10.

---

### நன்றியறிவு.

———:o:———

இக்கல்யாணங்களெல்லாம் நடந்தவுடன், டெல்லி அரசனாகிய டொக்லாக்குக்குப் பின்வருமாறு ஹரிஹரன் செய்திசொல்லியனுப்பினான்:—

"துருக்கன் தன்மேல் இனிப் படையெடாமல் இருப்பானாகில், தான் பிடித்திருக்கும் கைதிகளை உபத்திரவிக்

காமல் அனுப்பிவிடுவான்; இல்லாவிடில், மாலிக்நாயப்முதல் எல்லோரையுங் கொன்றுவிடுவான்.

"துருக்கன் நாட்டைக் கொள்ளையடித்ததற்காகப் பதினாயிரம்மணங்கு தங்கங் கொடுக்கவேண்டும்"

இவ்வாறு செய்திசொல்லியனுப்பி இரண்டுமாதமாயின. வித்யாரண்யரும் ஹரிஹரனுமாக ஆனைகுந்திக்குத் தெற்கேபோய்ப் பார்த்துவிட்டுவரலாமென்று புறப்பட்டார்கள். இருவருமாய்த் துங்கபத்திராநதியைக்கடந்து அப்புறஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவ்விடம் ஆனைகுந்திசமஸ்தானத்தைச்சேர்ந்ததுதான். மூன்றுபக்கங்களில் அநேகமாய் மலையையும், ஒருபக்கத்தில் நதியையும் எல்லையாகக் கொண்ட ஓரிடத்தைப்பார்த்துவிட்டு, வித்யாரண்யர்,

"ஹரிஹரா! ஆனைகுந்தி ஊரைவிட இவ்விடம் நன்றாயிருக்கிறது" என்றார்.

"என்னசெய்யச் சொல்லுகிறீர்கள்?"

"நீ இவ்விடத்தில் ஒரு நகரங்கட்டவேண்டும்"

"தங்களுக்கு நிச்சயமாய் அவ்விடத்திற்கட்டுவது நலமென்று தோன்றுகிறதோ?"

"எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது."

"ஆனால் ஒரு புதியநகரம் கட்டிவிடுவோம்"

"நீ அதை அவசியம் செய்யவேண்டும்."

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், இருவரும் ஹம்பியண்டைவந்து சேர்ந்தார்கள். அச்சமயத்தில் இரண்டு சேவகர்கள் வெகு வேகமாய் ஓடிவந்தார்கள். வந்து இவர்களை வணங்கி எதிர்நின்று,

"மஹராஜ்! ஒரு நல்ல செய்தி" என்றார்கள்.

"என்ன?"

"யாத்திரை போயிருந்த மஹாராணியவர்களது தாய் தந்தையர் இப்பொழுதுதான் வந்து சேர்ந்தார்கள்."

"இப்பொழுதா ?"

"ஆமாம் மஹராஜ்! ராணியார் தங்களிடஞ் சொல்லி, வரச் சொன்னார்கள்."

"சரி நான்வந்துவிடுகிறேன் என்று நீ போய்ச்சொல்" என்று சொல்லி யிவர்களையனுப்பின தக்கணமே, வேறு இருவர் குதிரைமேல் ஏறிக்கொண்டு வெகு வேகமாய் ஓடி வந்து இவ்விருவரையும் பணிந்து நின்றார்கள்.

"என்னசெய்தி?" என்றார் வித்யாரண்யர்.

"நல்ல செய்திதான்" என்றான் அவர்களுள் முதன்மையாயிருந்தவன்.

"நான் சொன்னதற்கெல்லாம் ஒப்புக்கொண்டானா?"

"ஒப்புக்கொண்டான்."

"அடா!"

"அவ்வளவு தங்கமும் வந்துவிட்டது."

"என்ன !"

"நான் பொய் சொல்லவில்லை."

"டொக்லாக் ஏன் இவ்வளவு புத்திசாலியாயிருந்துவிட்டான்?"

"அவன் சரியாய் நடப்பான்போல் தோன்றவில்லை. மந்திரி வந்து அவனுக்குப் போதித்தார். ராஜ்ஜியத்திலுள்ள திரவியக்குறைவையும், ராஜ்ஜியத்திலுள்ள ஜனங்களுக்கு டொக்லாக் மேலிருந்த வெறுப்பையும் நன்றாக அவனுக்கு எடுத்துரைத்தார்."

"அப்புறம்?"

"அப்புறமும் அவர் சொல்வதை ஒப்புக்கொள்ள மாட்டேனென்றான்."

"பிறகு எப்படி அவர் அவன்மனதைத் திருப்பினார்?"

"தன்னால் இனிப்படையெடுத்துப்போக முடியாதென்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார்."

"அதற்கவன் பயப்பட்டானோ?"

"இல்லை."

"பின்னை?"

"மாலிக்காயப் இல்லாமல் யுத்தமேநடத்த முடியாது என்றார், அப்புறந்தான் சிறிது தயங்கினான்."

"சரிதான்."

"மேலும், மாலிக் நாயயையும் நாம் கொன்று விடுவதாக வன்றோ சொன்னோம். அதற்காகவும் பயந்து அவன் நம்மேற் படையெடாமல் இருக்கிறான்."

"ஹரிஹரா! நீ செய்தது நல்ல யுக்திதான்" என்று ஹரிஹரனை நோக்கிச் சொல்லிவிட்டு, மீண்டும் "துருக்கனையழைத்துச் செல்வதற்கு யாரேனும் வந்திருக்கிறார்களோ!" என்றார்.

"ஒருவரும் வரவில்லை. நாம் கேட்ட திரவியத்தைமாத்திரம் கொடுத்தனுப்பி யிருக்கிறான்."

"ஹரிஹரா! நீதகுந்தமரியாதையுடன் இவர்களைக்கொண்டுபோய், டெல்லியில் விட்டுவரச்சொல்ல வேண்டும்."

"அப்படியே" என்றான் ஹரிஹரன். மீண்டும்,

"ஐயா! நீர்போய்த் துருக்கர்களுக்கெல்லாம், நல்லசெய்தியைச் சொல்லும். இன்று சாயங்காலமே டெல்லிக்குப் புறப்படுவதற்குச், சித்தமாயிருக்கச் சொல்லும், நமது உத்யோகஸ்தர்களை, அவர்களை யழைத்துச் செல்வதற்கு ஆக

வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச்சொல்லும், நீர்போய்வர லாம். இதோவருகிறோம்" என்று அவர்களையனுப்பினான்.

"ஐயா! ஒருவிண்ணப்பம்."

"என்ன?"

"எனக்கு நீங்கள் அதைத் தயவு செய்வீர்களென உறுதியாய் நம்புகின்றேன்."

"ஹரிஹரா! நீ சொல்லுவதற்கு நான் ஏதேனும் தடை சொல்லுவேனோ?"

"ஆனால், எனக்கு உறுதிமொழி யளிக்கின்றீர்களோ?"

"அளித்துவிட்டேன்."

"இவ்விடத்திலேயே, தாங்கள் சொல்லியபடி ஒரு நகரங் கட்டுவேன்."

"அதை நீயும் உனது சந்ததியாரும், மிகப்பிரபலமாக்கி நீடூழியாளும்படி கடவுள் அநுக்கிரகிப்பார்."

"மஹர்ஷே! தாங்கள் நிற்கும் இடத்திலேயே உங்களுக்கு ஒரு கோயிற் கட்டும்படி எனக்கு உத்தரவு கொடுக்க வேண்டும்."

"ஹரிஹரா!"

"மேலும், அந்நகரத்திற்குத் தங்கள் பெயரே இடுவேன்."

"ஹரிஹரா! உனது குருபக்தியை வியந்தேன். நான் அவ்வளவு மரியாதைக்கு அருகனல்லேன். நீ தயவுசெய்து நான் பெறக்கூடாத மரியாதைகளை யெல்லாம், என்பேரிற் சுமத்தாமல் இருக்கவேண்டும்; என்ன சொல்லுகிறாய்?"

"நான் சொல்லுவது என்னை?"

"இவ்வளவு உயர்ச்சி நான்பெறத்தகுந்தவனல்லேன்."

"தங்களுடைய சத்வகுணமிகுதியால் இம்மாதிரி பேசுகிறீர்கள். இன்னும் எவ்வளவோ, நான் தங்களுக்குச் செய்யவேண்டும்."

"நான் சொல்வதைக்கேள்?"

"இல்லை."

"எனக்கு இஃது எற்புடைத்தன்று."

"தாங்கள் வாக்களித்து விட்டீர்கள்."

"ஹரிஹரா! என்மீது கிருபைசெய்."

"ஐயா! தாங்கள் சொல்வதை யினிக்கேட்பேன்; வாக்களித்ததை மட்டும் மறவாதீர்கள்."

"நான்வாக்களித்து விட்டேன். அதனினின்றும் நான் சிறிதும் வழுவமாட்டேன்; அதனினின்றும் நான் சிறிதும் வழுவமாட்டேன். ஆயினும்—"

"என்ன?"

"நான் இறந்த பிறகு எனக்குக்கோயிற் கட்டு"

"அப்படியே, மஹர்ஷே!"

"இந்நகரத்திற்கு என்பெயரை, நான் இறந்தபிறகு கொடு."

"அப்படியே."

"ஹரிஹரா! நான் கேட்கும் கேள்விகளுக்கு உத்தரஞ் சொல்லு."

"அப்படியே."

"இந்நகரத்துக்கு என் பெயரைக்கொடுப்பானேன்?"

"நான் என்னகாரணம் சொல்லுவேன்?"

"காரணமில்லாமற் காரியஞ் செய்யலாகாதென்று உனக்குத் தெரிந்திருக்குமே."

காரணமில்லாமல் நான் செய்யவில்லை; தாங்களில்லாவிடில் எக்காரியமும் நடந்திராது."

"என்ன நீ சொல்லுகிறாய்?"

"தங்களுடையசாந்நித்யத்தால் எவ்வளவோ நடந்தன. உங்களாலேதாம் நமதுபிரஜைகளுக்கு, நாட்டின்மேல் அன்புவிழுந்தது. தாங்கள் அன்று இராத்திரி இரகசிய சபைக் கட்டிடத்தில் அவ்வுபந்யாசஞ் செய்திராவிடில் இவ்வளவு சீக்கிரமாய்த் துருக்கர்களை வெருட்டி ஓட்ட, நம்மவர்களுக்குத்தைரியமிருந்திராது. அஃது என்னவோ! நானும் எனது நாட்டோரும், தங்களை எங்களது தெய்வமாகப் பாவிக்கின்றோம். தங்களைப்பணிந்த எங்களுக்குத், தாங்கள், கேட்டவரனைக் கொடுக்கவேண்டும். பகவானவதார மாகையால், எனக்கு வரன்களைத்தட்டாது கொடுத்தீர்கள். இதற்கும் நான் செய்யுங்கைம்மாறு ஒன்றுமில்லை. மஹர்ஷே! தங்களது சாமீப்யமே, யாவருக்கும் பெருமையைக் கொடுக்கும்."

"ஹரிஹரா! எனக்கும் அப்படியே யிருக்கிறதடா."

"என்னஸ்வாமி!"

"உயர்ந்த சீலத்தை யுடைய நீ, என்பக்கல் இருப்பதனால், எனக்கும் நீ உயர்வைக் கொடுக்கின்றாய்."

"என்னை இவ்விதம்—"

"பிழையன்று."

"நாம்போவோமா?"

"போவோம்."

"துருக்கர்களை இன்றைக்கே அவர்கள் ஊருக்கு அனுப்பிவிடுவோமா?"

"போனவுடன் அக்காரியத்தைப்பார்."

னவிதம் இப்புது நகரத்தைக் கட்டலாமென்று யகளே எனக்குச் சொல்லிக்கொடுக்கவேண்டும்.''

''அப்படியே அப்பா.''

உடனே இருவரும் ஆற்றைத்தாண்டித் திரும்பவும் ஆனேகுந்தி வந்து சேர்ந்தார்கள்.

---

## முடிவுரை.

:o:

ஐயன்மீர்! இந்நேரம் நீங்கள் படித்துவந்த கதை, முடிவுபெற்றது. இக்கதை, வித்யாரண்ய நகரமென்பது எப்படி உண்டாயிற்று என்பதைத் தெரிவிக்கின்றது. இந்நகரம் 1336-ஆம் வருஷத்தில், நமதுகதையிற் சொல்லியபடியே யல்லாவிட்டாலும் ஹரிஹரனாலும் வித்யாரண்யராலும் உண்டாக்கப்பட்டதென்பது நிச்சயம். இந்நகரத்தரசர்கள் வெகு உன்னதபதவியை யடைந்திருந்தார்கள். இவர்கள் ஆளுகைக்குள் தென்இந்தியா முழுவதும் அடங்கியிருந்தது; இலங்கைத்தீவும் இவர்களது ஆளுகைக்குள் அடங்கியிருந்தது. இவ்வளவு மேன்மையை யடைந்திருந்த இராஜ்ஜியம் துருக்கர்களால் 1565-ஆம் வருஷத்தில் தொலைக்கப்பட்டது. என்னே இவ்விராஜஜியத்தின் பெருமை! இரண்டு போர்த்துகேசியர்கள் இவ்விராஜ்ஜியத்தைவந்து பார்த்துவிட்டு, மிகவும் உயர்ந்ததெனக் கூறியிருக்கின்றனர். இவ்விராஜ்ஜியத்துக்குச் சரியானசரித்திரமொன்று மகப்படவில்லை. ஆயினும் அப் போர்த்துகேசியர்கள் எழுதிவைத்ததைக்கொண்டு, இது மிகவும் உயர்ந்த இராஜ்ஜியமெனவே கொள்ளலாம். வித்யாரண்யநகரம் என்பது இப்பொழுது ஒரு நகரமாயிருக்கவில்லை. தலைக்கோட்டைச் சண்டையானபிற்பாடு துருக்கர்

கள் ஊரையிடித்துவிட்டார்கள். இடித்தும், இடிவில்லா அப்பட்டணத்தின்பெருமைக்கு அறிகுறியாக அநேகப யில்களையும் கட்டிடங்களையும் பார்க்கலாம். இப்பட்டணம் அறுபது மைல் சுற்றளவுள்ளதாயிருந்தது. இந்நகரத்தரச னுக்குப் பதினொரு லக்ஷம் படையிருந்தது. இந்நகரத்தின் தெருக்களின்வழியாக யாவராலும் எளிதில் நடந்துபோக முடியாதென்றால், இப்பட்டணத்தினது வியாபாரத்தைப் பற்றி நீங்களே யோசித்துப் பாருங்கள். பாரசீக தேசத்தி லிருந்து வந்திருந்த அப்தல்ராஸக், "உலகத்தில் இந்நகரத் தைப்போன்ற நகரம் ஒருவரும் பார்த்திருக்கமாட்டார்கள்; இதைப்போன்ற நகரத்தைப்பற்றி ஒருவருங் கேள்வியுற் றிருக்கமாட்டார்கள்" என்கிறார். ந்யூநிஸ் என்ற போர்த்து கேசியர், "இந்நகரத்திலுள்ள ஜனக்கணக்கைச்சொன்னால், யாவருங் கட்டுக்கதையென்று சொல்லுவார்கள்" என்கிறார். ஆகையால், இதைப்போன்ற நகரம் தற்காலத்தில் இந்தியா வில் இல்லையென்று நிச்சயமாகக்கொள்ளலாம். இந்நகரத் தின் பெருமை எங்கே! செல்வம் எங்கே! எல்லாம் இருந்த விடங்கூடத் தெரியாமற் போய்விட்டன. என்னே கடவு ளின்செயல்!

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர் கேசர ணுங்களே"

என்று கம்பர் துதித்தவாறு, பகவான் ஆக்கியழித்த வித்யா ரண்ய நகரத்தைப்பற்றி, இதுகாறும் யாம் கூறினோம்; இனி எல்லாவல்ல பகவானைப் பணிவோமாக.

The "Arya" Press, MADRAS.